# சத்துமிகுந்த, சுவையான
# பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்




**வளரும் குழந்தைகளுக்கு**
**சுவையான துணை**

பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள் அருமையான தனிச் சுவையோடு மேம்பட்டு விளங்குவது ஏன்? சத்துச்செறிந்த ஆரோக்கியமான குணச்சிறப்பே காரணம். ஆசையோடு குழந்தைகள் அவற்றை விரும்பிச் சுவைத்து வளருகின்றனர்! பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்— வளரும் குழந்தைகளுக்குச் சுவையான துணை.

**பிரிட்டானியா**

**பிஸ்கட்டுகள் மிகச் சிறந்தவை**

லின்டாஸ்-BBC.GLA 6-140 TM



# கல்கி

அநலவருடம்
வைகாசி 3

மே 16
1976

## ஓ, மனிதனே!

கொதிக்கும் சூரியனில்
வதங்கும் மேகங்களே
'மண்' குளிர்விக்க....
'மழை'யென வந்துதவும்!

'கொட்டு' விழுந்தால்தான்
புழு —
குளவியாக மாறிவரும்.

'உளி' அடிபட்டால்தான்
'கல்' உயிர்பெற்று
உருவம் தோன்றும்!

தன்னை வருத்திக்கொள்ளாத
தரணிவாழ் மனிதருக்கு....
மானம்.... மரியாதை....
மண்ணில் எப்படிவரும்....?

— சின்னை வெங்கட்ராமன்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளிலுள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



திரு P. S. K. மூர்த்தி (கான்டீன் ஸ்டோர்ஸ் இலாகாவின் ஓய்வு பெற்ற சூப்பரின்டெண்ட்) அவர்களின் அறுபதாண்டு நிறைவு விழா பம்பாய், மாதுங்காவில் விமரிசையாகக் கொண்டாடப் பட்டது. ஏராளமான உறவினர்களும், நண்பர்களும் விழாவுக்கு விஜயம் செய்து ஸ்ரீ P. S. K. மூர்த்தி, ஸ்ரீமதி ருக்மிணி தம்பதியை வாழ்த்தினர்கள்.



பரன்பூர் ஸ்டீல் கம்பெனியின் ஓய்வு பெற்ற அதிகாரியான சிறுகளத்தூர் **ஸ்ரீ A. N. சுவாமி** அவர்களின் **சதாபிஷேகம்** காசியில் அவரது மாப்பிள்ளை பிரபல டாக்டர் R. சங்கர் அவர்கள் இல்லத்தில் 18-4-76 அன்று விமரிசையாக நடைபெற்றது. அதுசமயம் ஏராளமான சுற்றத்தாரும், நண்பர்களும் விஜயம் செய்து ஆசிபெற்றுச் சென்றனர்.

கண்மணிப் பாப்பாவுக்கு மிகச் சிறந்ததென
நீங்கள் கண்டுகொண்ட பவுடர்...




# உங்களுக்கும்
# மிகச் சிறந்ததே







ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர். உங்கள் அருமையறிந்து உருவாக்கிய அருமையான செல்வம்.
வேறெந்தப் பவுடரிலும் நீங்கள் அனுபவித்தறியாத சொகுசான இன்பம். மலர் மாரி பொழிந்து உடலாரத்
தழுவும் மென்மை—உலகில் உன்னதமான இயற்கை நறுமணமேந்தி வரும் மென்மை.

இளந்தளிர் மேனிக்கென்றே ஈடிலாத் தூய்மையும் மென்மையுமே உருவான படைப்பு:
ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர். அதனால்தான் 75 ஆண்டுகளாகப் பாப்பா உலகின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக
விளங்குகிறது. அதனால் தான் உங்களுக்கும் இதுவே உகந்த பவுடர்.

# ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர்

## அருமைப் பாப்பாக்களின் ஆசை இதுவே:
## நீங்களும் உபயோகியுங்கள் ஜான்ஸன்ஸ் பேபி பவுடர்



லின்டாஸ்-J&J.7-140 TM

# புதிய சட்டங்கள்; புதுப்புது தலைவலிகள்

கடன் நிவாரணம், ஜனதா சாப்பாடு, *விருந்தினர் எண்ணிக்கைக்குக் கட்டுப்பாடு — எல்லாமே நல்ல நோக்கங்கள்.

ஆனால் பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்காக முடியக்கூடாது.

அடகுக் கடைக்காரர்கள் பலர் கருணையின்றி அநியாயமாக நடந்து கொள்கிறார்கள். உண்மை. ஆனால் ஒரு சிலருக்காக ஒரு தொழிலையே நசித்துப்போக விடக்கூடாது.

சட்டத்தைக் கடுமையாக்கலாம், கண்டிப்பாக அமல்படுத்தலாம். குற்றவாளிகளைத் தண்டிக்கலாம். இதைவிட முக்கியமாக அறியாத மக்களிடையே ஏமாற வேண்டாம் என்றும் அநாவசியமாகக் கடன் வாங்காதீர் என்றும் சமூக ஊழியர்களைக் கொண்டு பிரசாரம் செய்யலாம். புது காங்கிரஸ் இதனைத் தனது நிர்மாணத் திட்டத்தில் ஒன்றாக்கிக் கொள்ளலாம்.

ஆனால் வட்டி மறுப்பு, கடன் வசூல் ஒத்தி வைப்பு, அடமானப் பொருள்களின் ஏலம் ஒத்தி வைப்பு போன்ற சட்டங்கள் அடகு பிடித்துக் கடன் வழங்கும் தொழிலை ஸ்தம்பிக்கச் செய்துள்ளது.

பாதிக்கப்பட்டவர் அந்தத் தொழிலில் இருப்பவர் மட்டுமல்ல. மக்களுமே. அவசரமாக ஓர் உயிரைக் காப்பாற்ற டாக்டருக்குப் பணம் தர வேண்டும், மருந்து வாங்க வேண்டும் என்றால் பல்லாயிரக் கணக்கானோருக்கு நடு ராத்திரியிலும் உடனே உதவுகிறவர் அடகு பிடிப்பவர். ஒரு சைக்கிளையோ, பித்தளைப் பாத்திரத்தையோ, கைக் கடிகாரத்தையோ அடகுப் பொருளாக ஏற்றுக்கொண்டு உடனடியாகப் பணம் கொடுப்பவர் 'பான்புரோக்கர்'. பாங்கில் போய் விதிமுறைகளைப் புரிந்து கொண்டு கையெழுத்திட்டுக் கடன் வாங்குவது எளிய மக்களுக்குச் சாத்தியமில்லை.

பாங்குகளில் மக்கள் அவசரத் தேவைக்குக் கடன் பெறுவதை எளிதாக்காமல், அள்ளித் தெளித்த அவசரக் கோலமாகச் சட்டங்களை இயற்றுவதால் தாற்காலிக நன்மைகளோடு நிரந்தரத் தீமைகளும் விளையும். தனியாரிடமிருந்தோ அல்லது அரசிடமிருந்தோ கடன் பெற்றுக்கொண்டால் போதும்; குறித்த தவணையில் திருப்பித் தர அவசியம் இல்லை என்ற எண்ணத்தை மக்கள் மனத்தில் விதைப்பது நீண்டகால தார்மிக நோக்கிலோ அல்லது பொருளாதார நோக்கிலோ தேசத்துக்கு நல்லதல்ல.

சிவராமன் கமிட்டி சிபாரிசுப்படி கிராமப்புற பாங்குகள் இயங்கத் தொடங்கி லட்சக்கணக்கான கிராமங்களில் வசிக்கும் ஏழைகளுக்கெல்லாம் கடன் தேவைகளைப் பூர்த்தி செய்ய இன்னும் பல காலம் ஆகும். அப்போதும்கூட எல்லாக் கிராமங்களுக்கும் இவ்வசதி பரவுமா என்பது சந்தேகமே. அது வரையில் இன்று கிடைத்து வருகிற கடனுதவிகளுக்கு ஆபத்து நேரும்விதமாக எந்தச் சட்டமும் அமையாதிருப்பது நல்லது.

ஒரு ரூபாய்க்கு மக்களுக்கு வயிறார உணவு போடுவதை யார் வேண்டாம் என்பார்கள்? டிபன், காப்பி முதலியன குறைந்தபட்ச விலையில், அதிகபட்ச அளவிலும் தரத்திலும் கிடைக்குமானால் மகிழாதவர் யார்?

ஆனால் இதனை அன்பினால் சாதிக்க முயல வேண்டும். குறைந்துள்ள விலைவாசிகளுக்கு ஏற்ப நீங்கள் தயாரிக்கும் உணவுப் பண்டங்களின் விலைகளையும் குறையுங்கள் எனக் கோரலாம். அந்தக் கோரிக்கை பலன் தராத போனால் அரசாங்கமே முன்மாதிரியாகச் சில உணவு விடுதிகளை நடத்திக் காட்டலாம். பாருங்கள், இந்த விலையில் பண்டங்கள் வாங்கி, இந்தத் தரத்தில் உணவு தயாரித்து, இந்த அளவில் வழங்கி, எங்களால் இத்தனை சதவீதம் லாபம் அடைய முடிகிறது என்று நிரூபிக்கலாம். இதைச் செய்தால் மக்களின் ஆதரவும் கிட்டும்; ஹோட்டல் முதலாளிகளும் வாயை

கல்கி

மலர் 35

இதழ் 42

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

---

* இந்தத் தலையங்கம் எழுதிய பிறகு விருந்தினர் எண்ணிக்கைக் கட்டுப்பாடு ஓரளவு தளர்த்தப்பட்டுள்ளது.

மூடிக்கொண்டு முன் உதாரணத்தைப் பின்பற்றுவார்கள்.

ஆனால் இன்றையச் சட்டத்தின் விளைவாக ஹோட்டலே கதி என்று இருப்பவர்கள் வாயிலும் கசப்பு; ஹோட்டல் முதலாளிகள் மனத்திலும் கசப்பு.

ஏற்கனவே உள்ள சம்பந்திச் சண்டைகள் போதாவென்று பலப் பல கல்யாணங்களில் இப்போது பந்திச் சண்டை வேறு ஆரம்பமாகியுள்ளது. 'உங்கள் தரப்பு மனிதர்கள் தாம் பந்தியில் அதிகம்' என்று பெண் வீட்டார் கூற மாப்பிள்ளை வீட்டாரும் அதையே சொல்ல, சாப்பிட்டுக் கை கழுவியவர் ஒருவித குற்ற மனப்பான்மையுடன் பரிதவிக்க, மொத்தத்தில் கல்யாணங்களில் நிலவ வேண்டிய மகிழ்ச்சி வேதனையாக மாறிவிடுகிறது.

அபரிமிதமான விளைச்சலை நாடு கண்டிருக்கும் போது வசதி படைத்தவர்களின் திருமணங்களையும் பஞ்சக் கோலம் பூணச் செய்ய வேண்டுமா? அதன் விளைவாகச் சமையல்காரர், மளிகை – காய்கறி வியாபாரிகள், பந்தல்காரர் போன்ற பலரது பிழைப்பில் மண்ணை அள்ளிப் போட வேண்டுமா?

கல்யாணச் செலவுகளைக் குறைப்பது மத்தியதர வர்க்கத்தினருக்கு வரப்பிரசாதம்தான், மறுப்பதற்கே இல்லை.

ஆனால் சமூக மாறுதல்கள் எல்லாம் மக்களின் மனங்களில் பிறக்க வேண்டும். பிரசாரத்தாலும் பெரியோர்களின் உபதேசத்தாலும் படிப் படியாக உள்ளத்தில் வேரூன்றி வளர வேண்டும்.

எல்லாவற்றையுமே சட்டத்தை இயற்றிச் சமாளித்துவிடலாம்; சகலத்தையும் கட்டுப்பாட்டுக்குள் அடக்கிவிடலாம் என்று எண்ணுவது மக்களை ஆளும் முறையல்ல. அதற்கு வேறு பெயர் உண்டு.

# என்ன சேதி?

## லஞ்சத்தின் லட்சணம்!

கர்நாடக அமைச்சர் திரு டி.கே. நாயக்கர் அதி அற்புதமான கருத்துத் தெரிவித்தார்: 'கேட்டு வாங்குவதுதான் லஞ்சம். அவர்களாகவே தந்தால் அது அன்பளிப்பு. அது தவறாகாது' என்றார்.

இப்படிப்பட்ட ஓர் அதி மேதாவித்தனமான கருத்தைத் தமிழகத்தில் ஒரு தி.மு.க. பிரமுகர் ஓரிரு ஆண்டுகளுக்கு முன் கூறி நன்றாக வாங்கிக் கட்டிக் கொண்டார். இப்போது அதே கருத்தைக் கர்நாடக புது காங்கிரஸ்காரர் அதிலும் மாநில சட்ட அமைச்சர் வெளியிட்டிருப்பது அருவருப்பைத் தருகிறது. இந்த ஒரு கருத்தை வெளியிட்டதற்காகவே அவரது ராஜிநாமாவை மக்கள் கோரிப் பெறலாம்.

## பொறுப்பை உணர்தலும் உணர்த்தலும்

இந்திய தொழில் வர்த்தக சங்கங்களின் கூட்டணி தனது பொன் விழா ஆண்டில் தேசத்தின் தொழில்' உற்பத்தி பெருகப் பொன்னான கருத்துக்கள் சிலவற்றை வெளியிட்டிருக்கிறது.

தற்போது தேசத்தில் நிலவும் ஒழுக்கம், உழைப்பார்வம் இவற்றைப் பயன்படுத்திக் கொள்ளத் தவற வேண்டாம். உற்பத்தித் திறன் இருந்தும் முழுமையாகப் பயன்படுத்தப்படாதிருக்கும் நிறுவனங்களை முடுக்கி விடுவோம். அயல் நாட்டவருக்கு இங்கு உற்பத்திக்குச் சாதகமான சூழல் நிலவுவதை விளக்கி முதலீடுகளை வரவேற்போம். தேக்க நிலை கருதிப் புதுத் தொழில்களைத் தொடங்க அஞ்சுதல் கூடாது. தொழிலகங்கள் தனியாகவோ கூட்டாகவோ சுற்றுப்புறத்தில் உள்ள ஓரிரு கிராமங்களுக்குத் தர்மகர்த்தாப் பொறுப்பு மேற்கொள்ள வேண்டும். – இவையெல்லாம் தனியார் துறை தனக்குத் தானே கூறிக்கொள்ளும் அறிவுரைகள். அரசாங்கத்தின் கவனத்துக்கும் சிலவற்றை வைத்துள்ளது. தொழில் வர்த்தகச் சங்கங்களின் கூட்டணி:

தேக்க நிலை மறைந்து முழு மூச்சுடன் உற்பத்தி பெருகக் கட்டுப்பாடுகளைத் தொழில் துறை சம்பந்தப்பட்ட எல்லா அம்சங்களிலும் தளர்த்துங்கள். பண வீக்கம் மீண்டும் தலையெடுக்குமோ என்ற அச்சத்தைத் தவிர்த்துத் தொழில் துறையில் மேன்மேலும் முதலீடுகள் பெருக வாய்ப்பான சூழ்நிலையை உருவாக்குங்கள்.

சொல்லப் போனால் எல்லாம் ராஜாஜி கருத்துக்கள்தாம்.

## காந்தியப் பயணம்

பழம்பெரும் தேசபக்தரும் காந்தியச் செம்மலும் பேரறிஞரும் பல பெரும் பதவிகளை வகித்துக் கடைசியில் சுயராஜ்யா ஆசிரியராகத் தொண்டாற்றி ஓய்வு பெற்றவருமான திரு க. சந்தானம் மாரிஷியஸ், தென் ஆப்பிரிக்கா ஆகிய நாடுகளுக்கு விஜயம் செய்கிறார். காந்தியத் தத்துவங்களைப் பற்றிச் சொற்பொழிவுகள் நிகழ்த்த வந்த அழைப்புக்களை ஏற்றுச் சென்றுள்ளார். ஜூன் மாத ஆரம்பத்தில் தாயகம் திரும்புவார். இது போன்ற காந்தியப் பயணங்கள் உலகில் சாந்தி பரவ உதவும்.



எஸ்கிமோ கணவன்: (மனைவியிடம்) உலகத்தின் உச்சியிலேயே உட்கார்ந்து கொண்டு இருக்கிறாய். உனக்கு இன்னும் என்ன குறை? ஏன் முகத்தைத் தூக்கிக் கொண்டு அமர்ந்திருக்கிறாய்?

—தி வால் ஸ்ட்ரீட் ஜர்னல் - சாமி



இந்திய அரசின் சுற்றுலா வளர்ச்சித் துறை அலுவலகத்தில் 'கைரி' என்ற புலி சாதுவாகப் பழகி வருகிறது!







தி.மு.க. ஆட்சியில் கோயில்களைப் புதுப்பிக்க எடுத்துக் கொண்ட முயற்சிகளைப் பற்றி கலைஞர் பக்கம் பக்கமாக எழுதிக் குவிக்கிறார்!





"எனது சின்னஞ் சிறிய செல்வி
துடிதுடிப்பாக ஆரோக்கியமாக மற்றும்
சுறுசுறுப்பாக வளர வேண்டும்.
ஆகையால்தான் அவளுக்கு
நாள்தோறும் போர்ன்விடா தருகிறேன்."

OBM/5800 R TH



## "அவளுடன் ஈடுகொடுக்க இப்போது எனக்கு போர்ன்விடா தேவை!"

"...எங்கள் குடும்பத்தினர் அனைவருமே தினமும் இரண்டு வேளை போர்ன்விடா அருந்துகிறோம். என் கணவர் அதுதான் வேண்டுமென்கிறார். ஏனெனில், போர்ன்விடாவில் மால்ட், பால், க்ளுகோஸ் மற்றும் சர்க்கரையோடு, கோகோவும் சேர்ந்துள்ளது. கோகோ மிகவும் ஒன்று திரண்ட சக்தியுள்ள உணவுகளில் ஒன்று என்கிறார் அவர். தவிர, மற்ற மால்ட் கலந்த உணவுப் பானங்களைவிட, போர்ன்விடாவில் அதிக அளவில் கோகோ உள்ளது. கோகோ, போர்ன்விடாவுக்கு அதிக சுவையும் தருகிறது. என் கண்மணிக்கு போர்ன்விடா என்றால் உயிர். அவளது தசைநார்கள், எலும்புகள் மற்றும் மூளை வளருவதற்குத் தேவையான எல்லா போஷாக்குச் சத்துக்களையும் அது தருவதற்கு உதவுகிறது என்பது எனக்குத் தெரியும். அதோடு, மற்ற உணவுப் பானங்களைவிட போர்ன்விடா மிகவும் சிக்கனமானது. நான் தினமும் கோப்பை ஒன்றுக்கு 2 தேக்கரண்டி நிறைய போர்ன்விடா சேர்க்கிறேன். (மற்ற எல்லா உணவுப் பானங்களைப்போல) என்னுடைய போர்ன்விடா டின் அதிகமான நாட்களுக்கு நீடிக்கிறது.

நீங்களும் வாங்கிப் பாருங்கள் தெரியும்!




**காட்பரிஸ்**

# போர்ன்விடா

சக்தி, வலிமை மற்றும்
இன்சுவை கிட்டும்
உன்னத உணவு பானம்.

ஒவ்வொரு டின்னிலும் அதிக கோப்பை,
ஒவ்வொரு கோப்பையிலும் அதிக சுவை!



# ஜீவகாருண்யம் 3

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சங்கராசாரிய சுவாமிகள்

"நீம் கடன் பணிசெய்து கிடப்பதே" என்பதுதான் நம் வாழ்க்கையின் குறிக்கோளாக (Motto) இருக்க வேண்டும்.

கடன் என்றால், 'கடனே என்று செய்தேன், கடனிழவே என்று செய்தேன்' என்றெல்லாம் சொல்கிறோமே அந்த மாதிரி வேண்டாவெறுப்பாகச் செய்வது என்று அர்த்தமில்லை. கடன் என்றால் கடமை, Duty. அதை அன்போடு, ஆர்வத்தோடு இருதயமாரச் செய்ய வேண்டும்.

லோகத்தில் இத்தனை ஜீவராசிகள், பசு பட்சிகள், தாவர வர்க்கங்கள் இருக்கிறோமே, இதில் ஒன்றுக்கொன்று வாழ்வுக்கு அவசியமானவைகளைப் பரஸ்பரம் கொடுத்துக் கொண்டுதான் ஜீவிக்கிறோம். இதிலே மனுஷ்யர்களான நாம், நம் போன்ற சக மனுஷ்யர்களிடமிருந்தும் மிருகங்கள், பட்சிகள், தாவரங்கள் இன்னும் inanimate என்கிற ஜட வஸ்துக்களிடமிருந்தும் கூட எத்தனையோ உதவி பெறுவதால்தான் ஜீவ யாத்திரையை நடத்திக் கொள்ள முடிகிறது. இதனால் தான் ஜடம், Inanimate என்று நினைக்கிற பூமி, ஜலம், அக்னி இவற்றுக்குக் கூட நாம் செய்கிற பிரதியாக வைதிக மதத்தில் பலவிதமான சடங்குகள் இருக்கின்றன. தாவரங்களுக்கு உயிர் இருக்கிறது, உணர்ச்சிகள் இருக்கின்றன என்று ஜகதீஷ் சந்திர போஸ்தான் கண்டுபிடித்தார் என்றில்லை. வனஸ்பதி, அச்வத்தம் என்கிற மாதிரியாக அவைகளையும் உயிரும் உணர்ச்சியும் கொண்டதாகப் பார்த்து மந்திரபூர்வமாக அவற்றுக்கும் நம் பிரதி உபகாரமாக பூஜைகளைப் பண்ண சாஸ்திரம் இருக்கிறது. ஒரு காக்கை இருக்கிறது. எங்கேயோ ஒரு பழத்தைச் சாப்பிட்டுவிட்டு நம் தோட்டத்திலே வந்து எச்சமிடுகிறது. அந்தப் பழத்தின் கொட்டை இங்கே நம் வீட்டுத் தோட்டத்தில் விழுந்து மரமாகிறது. அந்தக் காக்கை நமக்கு ஓர் உபகாரம் பண்ணிவிட்டது. நாய் காவல் காக்கிறது. குதிரையை வண்டியில் கட்டிச் சவாரி பண்ணுகிறோம். கோமாதா நமக்குப் பௌதிகமாகவும், ஆத்மார்த்தமாகவும் பண்ணுகிற உபகாரமோ கொஞ்சநஞ்சமில்லை. இப்படி எல்லாரிடமும் உபகாரம் பெற்றுவிட்டு, மநுஷ்ய ஜன்மா எடுத்துள்ள நாம் பிரதி உபகாரம் பண்ணாமல் இருந்தால் பாபம் அல்லவா? "நன்றி மறப்பது நன்றன்று", "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்—உய்வில்லை செய்நன்றி கொன்ற மகர்க்கு" என்றெல்லாம் மகா பெரியவர் வள்ளுவர், இன்னும் மநு, வியாஸர் எல்லாரும் சொல்கிறார்களே! இதிலே மந்த்ரவத்தாகவும், கிராம ஜனங்களின் வழக்கத்தில் வந்துள்ளதுமான அநேக சடங்குகளைப் பண்ணினாலே, அசேதனம் (Inanimate) என்று நாம் நினைக்கிறவற்றின் அதி தேவதைகள் திருப்தி அடைந்துவிடுகிறார்கள். இது தவிர தாவரங்களுக்கு ஜலம் கொட்ட வேண்டும். மிருகங்களிடம் அன்பு பாராட்ட வேண்டும். அவற்றுக்குக் கொடுமை செய்யவே கூடாது. "வாயில்லா ஜீவன்" என்றே அவைகளை ரொம்பவும் பரிவோடு சொல்வது வழக்கம். முன் காலத்தில் ஊருக்குள் மட்டுமின்றி, வெளியிலே மாடுகள் மேய்ச்சலுக்குப் போகிற இடங்களில்கூட அவற்றுக்கெனவே குளம் வெட்டி வைப்பார்கள். ஒரு பசுவுக்குக் கழுத்திலே அரிக்கிறது. நம்மைப் போல் அதற்குக் கையா இருக்கிறது, சொரிந்து கொள்ள? "எனக்கு அரிக்கிறது" என்று சொல்ல அதற்கு வாய்கூட இல்லையே! அதன் கஷ்டத்தை உணர்ந்து பசு சொறிந்து கொள்வதற்கென்றே அங்கங்கே கற்களை நாட்டி வைத்தார்கள். "ஆதீண்டு குற்றி நிறுவுதல்" என்று இதை ஒரு பெரிய தர்மமாகவே நீதி நூல்களில் சொல்லியிருக்கிறது. கடைசியில்





அமெரிக்காவில் ஒரு கால்பந்துக் குழுவிலிருந்த பதினைந்து பேருக்கு உடற் பரிசோதனை நடைபெற்றது. அவர்கள் அத்தனை பேருக்கும் ரத்த அழுத்தம் இருப்பதாகக் கண்டு விளையாடத் தகுதி யற்றவர்கள் ஆனார்கள்.

'எல்லோருமா தகுதி யில்லாதவர்களாக இருப்பார்கள்?' என்று சந்தேகப்பட்ட டாக்டர் ஜான் ஸ்கராக் என்ற சுகாதார இலாக்கா மருத்துவர் அவர்களை மறு பரிசீலனைக்கு அனுப்பி வைத்தார். அதிசயம், அவர்கள் எல்லோரும் பரீட்சையில் தேர்ச்சி யடைந்து விட்டனர்.

முதல் தடவை அவர்கள் தகுதியற்றவர்கள், ஆனதற்குக் காரணம் என்னவென்று ஆராய்ந்த போது தெரிந்தது. முதலில் அவர்களைச் சோதித்தவர், அழகான ஒரு பெண் டாக்டர் என்பது!

இல்லஸ்டிரேட்டட் வீக்லி - சேலம் தர்மாக்ரா

## "கம்ப்யூட்டர்" பேனா

ஆராய்ச்சியிலிருந்து கிடைக்கும் முக்கியமான தகவல்களை விரைவாக எழுதிக் கொள்ளும் விஞ்ஞானி ஒருவரைக் கற்பனை செய்து கொள்ளுங்கள். பழைய காகித உறையின் பின் பகுதியில் இவர் எழுதுகிறார். இதில் இடமே இல்லை. ஏற்கனவே எழுதியதன் மேலேயே கூட எழுதித் தள்ளியிருக்கிறார். பின்னர் அவர் செய்வதுதான் வியப்பூட்டும். நாம் எழுதிக் குவித்த குறிப்புக்களைக் கிழித்தெறிந்துவிட்டு அமைதியாக வீட்டுக்குச் செல்கிறார். எந்த தைரியத்தில் என்றால், குறிப்புக்கள் அனைத்தும் பேனாவுக்குள்ளேயே அடைக்கலமாகி விட்டன! மெல்லிய கம்பிகள், சிகரெட் டப்பா அளவில் இருக்கும் ஒரு கம்ப்யூட்டருடன் இந்தப் பேனாவை இணைக்கின்றன. இந்தப் பேனா எழுதுவதினால் ஏற்படும் அசைவை உணர்ந்து கொள்ளுகிறது. இந்த அதிசயப் பேனாவின் விலை நூறிலிருந்து இருநூறு டாலருக்குள். இதனை உருவாக்கியவர் ஸ்டான்ஃபோர்டு ஆராய்ச்சி நிறுவனத்தைச் சேர்ந்த ஹ்யூவிட் க்ரேன். - யு.எஸ்.ஐ.எஸ்.



## ரத்தான விவாகரத்து!

விவாகரத்து செய்து கொள்வதாக ஒரு தம்பதியர் தீர்மானித்தனர். அவர்களுடைய குழந்தை யாரிடம் இருப்பது என்று பிரச்னை எழுந்தது. அவர்கள் கேட்டார்கள்: ''நீ அப்பாவிடம் இருக்க விரும்புகிறாயா, அம்மாவிடமா?''

குழந்தை யோசித்தது. பிறகு கேட்டது: ''யாரிடம் டெலிவிஷனும் காரும் இருக்கப் போகின்றன?''..

தம்பதியர் விவாக ரத்து செய்வதில்லை என்ற முடிவுக்கு வந்தனர்.

இடம்: ஜெர்மனி. — வீக்எண்ட் - ராமு

நம் மாதிரியான மநுஷ்யர்களிடத்தில் வந்தால், சிருஷ்டியில் பாக்கியுள்ள அத்தனை ஜீவ இனங்களுக்கும் எத்தனை கஷ்டம் இருக்குமோ அத்தனையும் சேர்த்து வைத்து ஒவ்வொரு மநுஷ்யனுக்கும் இருக்கிறது. இது இவனுடைய அலாதி புத்தியினால் இவனே சம்பாதித்துக் கொண்ட சொத்து! இவனைப் போல் problem (பிரச்னை) வேறு எதற்கும் இல்லை. இதிலே முக்கால்வாசி இவனே மனசால் கற்பித்துக் கொண்டதுதான். இதைச் சரிப்படுத்துகிற மகா பெரிய பரோபகாரத்தைத்தான் மகான்கள் செய்கிறார்கள்.

இது தவிரவும் வைத்தியசாலைகள், சிறைச்சாலைகள், ஏழை விடுதிகள், அநாதாசிரமங்கள், விதவா இல்லங்கள், பிச்சைக்காரர் விடுதிகள் முதலானவற்றைப் போய்ப் பார்த்தால் தெரியும், மநுஷ்யர்கள் எத்தனை விதசான கஷ்டங்களுக்கு ஆளாகிறார்கள் என்பது. இவற்றை மகான்கள்தான் என்றில்லை, சாதாரண ஜனங்களான நாமும் ஏராளவுக்குத் தீர்த்துவைக்க முடியும். இம்மாதிரியான இடங்களைப் போய்ப் பார்த்தால் நம் போன்றவர்களின் உபகாரத்தைக்கூட ஈசுவரன் எத்தனை ரூபங்களில் வந்து எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறான் என்று தெரியும்.

நாம்செய்ய வேண்டியது என்னவென்றால், ஒரே வார்த்தையில் சொல்ல வேண்டுமானால், துக்கம் எங்கே உண்டோ, அங்கே நாமே வலுவில் சென்று, அந்தத் துக்க நிவிருத்திக்கு நம்மால் ஆகக் கூடியதையெல்லாம் செய்ய முயலுவதேயாகும். பணத்தாலோ, சரீரத்தாலோ, வாக்காலோ நம்மால் முடிந்த உதவியைப் பண்ண வேண்டியது நம் கடன், கடமை, 'Duty'.

இதைத்தான் தர்மம், அறம் என்று சொல்வது. முதலிலேயே நான் சொன்னபடி, இதைச் செய்வதால் எதிராளிக்கு வாஸ்தவத்தில் எந்த அளவுக்குத் துக்க நிவிருத்தி உண்டாகுமோ அதற்கு நாம் 'காரண்டி' சொல்ல முடியாது. அதற்கு நாம் ஜவாப்தாரியும் அல்ல. ஆனால் இப்படிச் செய்வதால் நமக்குச் சித்தசுத்தி நிச்சயமாக ஸித்திக்கிறது. அதாவது மன மாசு அகல்கிறது. திருவள்ளுவர் கூட தர்மத்துக்கு Definition (லக்ஷணம்) சொல்லும் போது **மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன்** என்றுதான் சொல்கிறார்.

(தொடரும்)

**[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]**

**நெஞ்சை விட்டு நீங்காத காட்சி!**

# பிற்சேர்க்கைக்கு அமைந்த யோகம்!

டைரக்டர் யோகானந்த் என் தலையைக் கண்டதுமே, "ஸார்! 'கல்கி' பத்திரிகையின் மூலம் தமிழ் மக்களுக்கு என் நன்றியையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன். பிறகுதான் மற்றதெல்லாம். நான் தமிழ்ப்பட உலகில் அடியெடுத்து வைத்து இன்று இருபத்தைந்து ஆண்டுகள் பூர்த்தி ஆகிவிட்டன. தமிழ் மக்கள் எனக்கு அளித்து வந்திருக்கும் நீண்ட நாள் ஆதரவை நான் என்றும் மறக்க முடியாது" என்றார்.

டைரக்டர் யோகானந்த் தெலுங்குப் படங்களும் ஏராளமாக டைரக்ட் செய்திருக்கிறார். தெலுங்கில் பலப்பல படங்களுக்குக் கதை வசனமும் எழுதியிருக்கிறார். "தோடு தொங்கலு" என்ற படம் சிறப்புப் (அவார்ட்) பரிசு பெற்ற ஒன்று. காமிராவை இயக்குவதிலும் எடிட்டிங்கிலும் அநுபவமும் திறமையும் உள்ளவர்.

கல்கி வாசகர்கள் சார்பில் நான் யோகானந்தின் வெள்ளி விழாப் பணிக்கு பாராட்டுத் தெரிவித்ததும் அவர், "உங்கள் 'கிருஹப் பிரவேசம்' விமரிசனத்தில், அது "சோட்டி பஹு" என்ற ஹிந்திப் படத்தின் தழுவல் என்று எழுதியிருக்கிறீர்கள். ஆனால், ஹிந்தி, தமிழ் இரண்டுக்குமே மூலமாயிருந்தது, 'பிந்தூர் சலே' என்ற சரத் பாபுவின் வங்கக் கதை..." என்று கூறிவிட்டு சிரித்தார்.

" 'நெஞ்சை விட்டு நீங்காத காட்சி' பற்றிப் பேசுவோமா? கிருஹப் பிரவேசத்தில் தம்பிக்காக அண்ணன் 'பெண் பார்க்க'ப் பணக்கார வீட்டுக்குப் போன சம்பவத்தைத்தான் அதிகம் பேர் குறிப்பிட்டு எழுதியிருக்கிறார்கள். அந்தக் காட்சியைப் பற்றி நீங்கள்.."

"...ஆகா! தாராளமாய்ச் சொல்லுகிறேன். 'படத்தில் இன்னும் ஏதாவது சுவாரசியமாகச் சேர்த்தால் என்ன?' என்று எனக்குத் தோன்றியது. இந்த எண்ணத்தை நடிகர் திலகம் சிவாஜி கணேசனிடம் தெரிவித்தேன். தம்பிக்குப் பெண் பார்க்கப் போன இடத்தில் லாரி டிரைவர் கூச்சப்பட்டதை வைத்து டயலாக் எழுதி, 'ஸ்கிரிப்ட்' தயாரித்துக் கொண்டேன். சிவாஜி அதை வாங்கிப் பார்த்தார். படித்தார். அடுத்த நிமிஷம் ஷூட்டிங்குக்குத் தயார்!" என்று சொல்லி விட்டார். அரை மணி நேரத்தில் படம் எடுத்து முடித்து விட்டோம். ஏதாவது புது மாதிரிக் காட்சிகளைச் சேர்த்து, சிவாஜியிடம் அது பற்றிச் சொன்னால், மிகவும் கவனமாகக் கேட்பார். அடுத்த நிமிஷத்தில் அதை மனத்தில் வாங்கிக் கொண்டு விடுவார். அப்புறம் நாம் அதைப் பற்றிக் கவலையே படவேண்டாம்."

"கடைசி நிமிஷத்தில் 'ஆஃப்டர் தாட்' டாகச் சேர்க்கப்பட்ட ஒரு காட்சி பல லட்சம் ரசிகர்களின் இதயங்களைக் கொள்ளை கொண்ட பிரதானக் காட்சியானது பெரும் விந்தைதான்! நான் வருகிறேன்!" என்றேன்.

"உங்கள் பேட்டியிலும் 'ஆஃப்டர் தாட்' டாக ஒரு பிரதான விஷயத்தைச் சேர்த்துக் கொள்ளுங்களேன்!" என்றார் யோகானந்த்.

"என்ன சொல்லுங்கள்!"

"சினிமாவுக்குத் தமிழ் நாட்டில் அறுபத்து மூன்று சதவிகிதம் தமாஷா வரி விதிக்கப்படுகிறது. அது மற்ற மாநிலங்களையெல்லாம் விட அதிகம். அதை அரசு குறைக்க முன்வந்தால் இந்தத் தொழில் நசித்து விடாமல் காப்பாற்றலாம்" என்றார் டைரக்டர் யோகானந்த்.

—காந்தன்





இன்றையக் கதை

# பூமராங்

தரஜா

பல்ராம் முகத்துக்குப் பௌடர் போட்டுக் கொண்டிருந்தான், மும்முரமாக. கழுத்துக்குக் கொஞ்சம் தாராளமாகவே பூசிக் கொண்டு, கர்சீப்பினால் அழுந்தத் துடைத்து விட்டுக் கொண்டான். சின்னச் சின்ன ஸ்பிரிங்குகளைப் பொருத்தினாற்போல் சுருண்டிருந்த தலை முடியைச் சீப்பினால் மெள்ள அழுத்தி விட்டுக் கொண்டான். ஷெல்பில் இருந்த 'இன்டிமேட்'டை எடுத்துச் சட்டையிலும் பாண்டிலும் தடவிக் கொண்டான். அலங்காரம் முடிந்த திருப்தியுடன் அறையை விட்டு வெளியே வந்தான்.

மாடியிலிருந்து இறங்கி ஹாலைக் கடக்கும் போது அவன் தாயார் எதிர்ப்பட்டாள். அவள் கேட்பதற்கு முன் பல்ராமே முந்திக் கொண்டு, ''ராஜா அண்ணாமலைபுரம் வரை போயிட்டு வருகிறேனம்மா... அவசர வேலை இருக்கிறது...'' என்றான்.

''உன் அப்பா ஆபீசுக்கு வரச் சொல்லியிருந்தாரே, மத்தியானம்... அங்கே போகவில்லையா?...'' என்று விசாரித்தார் தாயார்.

''போம்மா! இந்த அப்பாவுக்கு வேலை இல்லை. ஆபீசுக்குப் போனால் அக்கவுண்டட்டனிடம் அழைத்துப் போய் உட்கார்த்தி விடுகிறார். அந்த ஆசாமியோ ரூபாய், பைசா விவகாரங்களைச் சொல்லிச் சொல்லி என் மூளையையே குழப்பி விடுகிறார். எல்லாம் நாளைக்குப் பார்த்துக் கொள்கிறேன்!....'' என்று சொல்லி விட்டு, போர்ட்டிகோவில் இருந்த ஸ்கூட்டரை ஒரே உதையில் கிளப்பிக் கொண்டு பறந்தான் பல்ராம்.

அடுத்த பத்தாவது நிமிடத்தில் பல்ராம் ஒரு பெண்கள் கல்லூரிக்குச் சற்றுத் தள்ளினாற்போல் இருந்த பஸ் ஸ்டாண்டில் நின்று கொண்டிருந்தான். அவனுடன் இன்னும் ஐந்தாறு பேர்கள்.

கல்லூரி விட்டுப் பெண்கள் அப்போதுதான் வெளியே வரத் தொடங்கியிருந்தார்கள். நூற்றுக் கணக்கான பட்டாம்பூச்சிகள் அந்தப் பிராந்தியத்தில் பறப்பது போன்ற ஒரு பிரமையைத் தோற்றுவித்த அந்த மாணவிகள் கூடிப் பேசிக் கொண்டும், சிரித்தவாறும் போய்க் கொண்டிருந்தார்கள்.

பல்ராமும் அவனது சகாக்களும் அந்த அழகுப் பதுமைகளைக் கண்களால் விழுங்கிக் கொண்டிருந்தார்கள். ஆனால் வாய் சும்மா இருக்கவில்லை. ஒவ்வொரு பெண்ணும் அவர்களைத் தாண்டிச் செல்லும்போது விமரிசனக் கொப்பரையில் போட்டு வறுத்தும் வென்று மகிழ்ந்து கொண்டிருந்தது.

''டேய்! பச்சைக் கிளி போகுது பாருடா!'' என்றான் ஒரு ஹிப்பி தலையன்.

''கிளி இல்லையடா!.... இது கிளியோபாட்ரா!... மூக்கைப்பாரு - முப்பத்தாறு இஞ்ச்!'' என்று அவனைத் திருத்தினான் பல்ராம்.

சற்று மூக்கு நீளமான அந்தப் பச்சை நிற நைலக்ஸ் பாவை, நின்று மூக்கை ஒரு முறை உறிஞ்சி விட்டுப் போனாள்.

பருமனான இன்னொரு பெண் அவர்களைக் கடந்து சென்றாள். ''டேய் கோபி! ஹெவி வெயிட் சாம்பியன்ஷிப் ரெஸ்லிங் எங்கிடா நடக்குது?'' என்று கேட்டுக் கிண்டல் பண்ணினான் ஒருவன்.

சல்வார் — கமீஸ், கழுத்தைச் சுற்றி துமாலுடன் ஒரு பெண் வந்தாள். ''இப்படியெல்லாம் இவங்க மேல் அங்கவஸ்திரம் போட ஆரம்பிச்சதினாலேதான் நம்மூரிலே வயசானவங்க அங்கவஸ்திரம் போடறதையே நிறுத்திட்டாங்க!'' என்று வம்புக்கிழுத்தான் இன்னொருவன்.

இப்போது வேறொரு பெண் அவர்கள் பக்கமாக வந்தாள். ரத்தச் சிவப்பு நிறத்தில் புடவை. அதே நிறத்தில் பிளவுஸ். இரட்டைப் பின்னல். மல்லிகைச் சரம் ஒன்று பாலம் போல் இரண்டு பின்னல்களையும் இணைத்திருந்தது.

''காம்ரேட் அம்மா வராங்கடா!''

''இதைப் பார்க்கும்போது எனக்கு மிளகாய்ப் பழம்தான் ஞாபகத்துக்கு வருது... சின்ன வயசுலே தெரியாத்தனமா பழம்னு நினைச்சுக் கடிச்சுட்டேன்.... அப்பா! என்ன காரம்! என்ன காரம்! இஸ்ஸ்....''

அவனைத் தொடர்ந்து பல்ராம் உட்பட எல்லோரும் 'இஸ்' என்று குரல் எழுப்பினார்கள்.

அந்தப் பெண் நின்றாள், நிதானித்தாள். இளைஞர்களை நெருங்கி வந்தாள். ''என்ன சொன்னீங்க?'' என்றாள் வெடுக்கென்று.



''நாங்க ஒண்ணுமே சொல்லலியே! இவன் ஹோட்டலிலே மிளகாயைக் கடிச்சுட்டானும்... அதான் 'இஸ்'னு 'இஸ்க்கருன்... நாங்க விம்பதடிக்கா 'இஸ்க்'கரோம்...'' என்று விளக்கினன் பல்ராம்.

''நீங்க பேசினது என் காதிலே விழுந்தது. என்னை மிளகாய்னு சொன்னீங்க இல்லே?''

''இல்லேயே! 'அழகாய்'ன்னு சொல்லியிருப்போம். அது உங்க காதிலே தவரு விழுந்திருக்கும்... நீங்க ஒரு ஈ. என். டி. ஸ்பெஷலிஸ்ட் யார்கிட்டேயாவது போங்களேன். காதை நல்லா 'செக்கப்' பண்ணுவாரு...''

''போறேன்... அதுக்கு முன்னலே நீங்க 661085க்கு போன் பண்ணுங்க...அங்கே உங்களுக்கு ராஜ மரியாதை கிடைக்கும்.''

''அதான் உங்க வீட்டு போன் நம்பரா?''

''இல்லே! பைத்தியக்கார ஆஸ்பத்திரி நம்பர்!''

சொல்லிவிட்டுக் கழுத்தை ஒடித்துவிட்டுப் போனள் அவள்.

''டேய்! மிளகு மாதிரி இருந்துட்டு, இது என்ன பேச்சுப் பேசுது பார்த்தியாடா!'' என்று வியந்தான் ஒருவன்.

''ஆனலும் பேச்சிலே காரம் அதிகம் தாண்டா!''

''நம்ம எல்லாரையும் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குப் போகச் சொல்லிவிட்டாளே! என்ன திமிர் அவளுக்கு! பின்னலேயே போய் இன்னும் கொஞ்சம் கலாட்டா பண்ணுவோமா?''

''வேணும்டா... அது துணிச்சல்காரப் பொண்ணு இருக்கும்போலத் தோணுது... எங்கேயாவது நம்ம கன்னத்திலே ஒண்ணு விட்டு வைச்சதுன்னு மானம் போயிடுமே!''

பல்ராமுக்கு மானம் போவதைப் பற்றிக் கூடக் கவலையில்லே. முக்கால் மணி நேரம் சிரமப்பட்டுக் கன்னத்தில் கால் அங்குலத்துக்கு அப்பியிருந்த பௌடர் பூச்சல்லவா காற்ரேடு போய்விடும்?... எனவே அந்தப் பெண்ணைத் தொடரும் எண்ணத்தை விட்டு விட்டு மற்றப் பெண்களை விமர்சனம் செய்வதில் இறங்கினன்.

பெண்கள் கும்பல் குறைந்தது. இண்டல் செய்த வாய்க்குச் சூடாகச் சுண்டல் சாப்பிட வேண்டும் போல் இருந்தது. எல்லோரும் கிளம்பிப் பீச்சுக்குப் போனர்கள். சுண்டல், மிளகு வடை, கைமுறுக்கு, ஐஸ்க்ரீம் எல்லாவற்றையும் ஒரு கை பார்த்துவிட்டு, மறுநாள் எந்தக் கல்லூரி வாசலில் சந்திப்பது என்று முடிவு பண்ணிக் கொண்டு கலைந்தார்கள்.

**ப**ல்ராம் வீடு திரும்பித் தன் அறைக்குள் நுழையப் போகும்போது விம்மல் சத்தம் ஒன்று வெகு அருகில் கேட்டது. மேஜை மீது தலையைச் சாய்த்தபடி விம்மிக்கொண்டிருந்தாள் பரிமளா.

''ஏய் பரிமளா! என்ன இது! ஏன் அழுகிறாய்?'' என்று விசாரித்தான் பல்ராம்.

பரிமளா தலையை நிமிர்த்தினள். முதலில் தயங்கினள். பிறகு சொன்னள்:

''இல்லேண்ணு... காலேஜ் விட்டு வர்றபோது ஒரு தடியன் என் பின்னேடேயே வந்து 'பேபி! ரெண்டு ரூபா தரட்டுமா?'ன்னுன்... 'எதுக்கு?'ன்னு கேட்டேன். 'முதுகுப் பக்கம் ஹோன்னு திறந்து கிடக்குதே; இன்னும் கொஞ்சம் துணி வாங்கி பிளவுஸை முழுசா தைச்சுப் போட்டுக்கோ பேபி'ன்னு என் டிரஸ்ஸைக் கேலி பண்ணினன் அண்ணு!...''



''அப்படியா சொன்னன் அந்த ராஸ்கல்! விட்டேனு பார் அவனை!... அவன் யார், எப்படி இருப்பான்னு சொல்லு... பஜ்ஜி பண்ணிவிட்டு மறு காரியம் பார்க்கிறேன்...''

''ஸ்கூட்டர் வைச்சிருக்கான் அண்ணு!... நம்பர் எம். ஆர். கே. 2727!''

''நாளைக்கே அவன் யார்னு கண்டுபிடிச்சு அவனை ஒரு பிடி பிடிக்கிறேன், பார்!''

சில விஷயங்களில் மட்டும் பல்ராம் சொன்னல் சொன்னபடி நடந்து கொள்வான். எனவே, போலீஸ் கமிஷனர் அலுவலகத்திலிருந்த தன் நண்பன் ஒருவன் மூலம் எம். ஆர். கே. 2727 ஸ்கூட்டர் சொந்தக்காரர் யாரென்று கண்டு பிடித்துக் கொண்டு, இரண்டு நாட்களுக்கெல்லாம் அந்த விலாசத்தைத் தேடிக் கொண்டு போனன்.

சின்னப் பங்களாதான். வாசலிலேயே அந்த ஸ்கூட்டர் நின்று கொண்டிருந்தது. 'பயல் வசமாக மாட்டிக் கொண்டான்' என்று மனமகிழ்ந்து போனான் பல்ராம்.

ஹாலில் நுழைந்தான். ''சார்!'' என்று குரல் கொடுத்தான். அது ''யார்!'' என்று எதிரொலித்தது.

''நான்தான்... பல்ராம்...''

''பல்பொடி வியாபாரியா?...''

''இல்லே... நான் வந்து... '' என்ன வென்று சொல்வது? ... உத்தியோகம் ஒன்று தேடிக்கொள்ளாததன் குறையை அப்போது தான் முதன் முதலாக உணர்ந்தான்.

''உட்காருங்கள், வருகிறேன்...''

சற்று நேரத்துக்கெல்லாம் அந்த அசரீரிக் குரலுக்குரிய பெண் வந்தாள். அவளைக் கண்டதும் திகைத்துப் போனான் பல்ராம். அன்றொரு நாள் 'மிளகாய்' என்று கிண்டல் பண்ணினார்களே, அதே 'காம்ரேட்'தான்...

''ஓ! நீங்களா! என்ன, பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குப் போயிருந்தீர்களா? இடம் கிடைத்ததா? சௌகரியமா இருக்கிறதா?'' என்று அக்கறையுடன் விசாரித்தாள் அவள்.

''ஷட்டப்!... ஜோக்கெல்லாம் வேண் டாம். நான் ஸீரியஸ் விஷயம் பேச வந் திருக்கிறேன். வாசலில் நிற்கிறதே ஸ்கூட்டர், அதற்குச் சொந்தக்காரர் யார்?''

''என் அப்பா!...''

''ஆ! அப்படியானால் உன் அப்பாவா காலேஜ் மாணவிகளை இன்னமும் கிண்டல் பண்ணிக் கொண்டு திரியறார்!... வயசான மனுஷர் பண்ணுகிற காரியமா இது?... கேவலம்! கேவலம்!''

''மன்னிக்கணும். சட்டப்படி ஸ்கூட்ட ருக்குச் சொந்தக்காரர் எங்க அப்பாதான். ஆனால் அதை உபயோகப்படுத்தறது என் அண்ணன்....''

''கூப்பிடு அவனை... சட்னி பண்ணணும்!''

''சட்னியா ?... இது வீடு, மிஸ்டர்..... ஹோட்டல் இல்லே!''

''கூப்பிடு அவனை, ஜல்தி !... நேரமாகிறது எனக்கு !''

''எதுக்காகக் கூப்பிடணுமாம் ?''

''என் தங்கையை அவன் கேலி பண்ணி யிருக்கான்...''

''அவனை நீங்க கண்டிக்கப் போறீங்களா?''

''ஆமாம், நான் யார் தெரியுமா ?.... வெப்புத் தமிழன் !... என் தங்கையைப் பழித்தவனைத் தாய் தடுத்தாலும் விடேன்!'' ஹா...ம்....''

''சிவாஜி மாதிரியே உறுமறீங்களே !.... இருங்க, இதோ கூப்பிடறேன், அண்ணனை!... ரமேஷ்! ரமேஷ் !''

குரல் கேட்டு அரும்பு மீசைக்கார இளைஞன் ஒருவன் வந்தான். அவனைக் கண்டதுமே, ''டாய், ராஸ்கல்!...'' என்று கூவிக் கொண்டே அவன் மீது பாய்ந்தான் பல்ராம். கராத்தே பழகியிருந்த பல்ராம், ப்ரூஸ் லீயின் படத்தை வேறு பார்த்துத் தொலைத் திருந்ததால் மின்னல் வேகத்தில் அவனது வலது கை இயங்கியது. ஒரே வெட்டு. அந்த இளைஞன் கீழே சாய்ந்து விட்டான்.

''ஐயையோ ! கொன்னுட்டீங்களே, என் அண்ணனை !''

பதறினாள் அந்தப் பெண்.

''இல்லே... இது வெறும் மயக்கம்தான்.... பத்து நிமிஷங்கள் கழித்து, தன்னாலே எழுந் திருப்பான்.... இனி மேலாவது என் தங்கை யிடம் வாலாட்டாமல் இருக்கும்படி சொல்லி வையுங்கள்!...'' என்று கூறிவிட்டு, வேக மாக வெளியே வந்தான் பல்ராம்.

**ப**திநொரு மணி இருக்கும். டெலிபோன் ஒலித்தது. சோபாவில் சாய்ந்தபடியே சேஸ் நாவலை வாசித்துக் கொண்டிருந்த பல்ராம் போனை எடுத்தான்.

''ஹலோ, பல்ராம் இருக்கிறாரா ?''

''ஸ்பீக்கிங்... நீங்க யாரு ?''

''என் குரல் தெரியல்லியா...? காலையிலே அடிச்சுட்டுப் போயிட்டீங்களே, ரமேஷ்—அவ ரோட தங்கை...''

''ஓ! மிளகா....'' நிறுத்திக் கொண்டான் பல்ராம். ''என்ன விஷயம் ?...''

''நீங்கள் என்னவோ பத்து நிமிஷங்களிலே அண்ணா எழுந்துடுவார்னு சொன்னீங்க.... மூணு மணி நேரம் ஆகுது.... இன்னும் அவன் எழுந்திருக்கவில்லேயே? ....''

''கவலையில்லே..... தன்னாலே எழுந்திருப் பான்!...'' என்ற பல்ராம் சற்றுத் தயங்கி னான். ''ஆமாம், உங்க பேர் என்ன, சொல் லவே இல்லையே !''

''மிஸ் மிளகாய் !'' என்று சொல்லிவிட்டு போனை வைத்தாள் அந்தக் குறும்புக்காரி.

அன்று முழுவதும் பல்ராம் வெளியே போக வில்லை. வழக்கமாக மூன்று மணிக்குப் பெண்கள் கல்லூரிப் பக்கம் போவதுகூட அன்று ஏனோ சுவாரசியப்படவில்லை.

நாலு மணிக்குப் பரிமளா வந்து சேர்ந் தாள். அவளது முகம் வாடியிருந்தது. ''இன்



சென்னை மேயராகவும், நல்ல காங்கிரஸ்காரராகவும் அரிய இசையே ரசிகராகவும், சிறந்த வைணவ பக்தராகவும் வாழ்ந்து மறைந்த திரு எம். ராதா கிருஷ்ண பிள்ளை அவர்களின் முப்பது வருடத் தொண்டினைப் பாராட்டிப் பல அன்பர்கள் எழுதிய கட்டுரைத் தொகுப்பு நூலை மத்திய உள்துறை மந்திரி திரு பிரம்மானந்த ரெட்டி அவர்கள் வெளியிட்டார். முதல் பிரதியைப் பெற்றுக் கொண் டார் திரு எம். பக்தவத்ஸலம். திரு பூவராகன் எம். பி., திரு மே. வி. வேணுகோபால் பிள்ளை முதலிய பல அறிஞர்கள் உரையாற்றினர்.

இன்னிக்கி என் இண்டர்வியூவை
எப்படித்தான் சமாளிக்கப் போறேனோ?
எனக்குக் கடுமையான தலைவலி.

நான் சொல்றதைக்
கேளுங்க, அனாஸின்
சாப்பிடுங்க!

# விரைவில் நிவாரணம் பெற சக்தி வாய்ந்த, நம்பகமான அனாஸின் சாப்பிடுங்கள்

**சக்தி வாய்ந்தது:** உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும் வலி நிவாரணியை அதிக அளவில் கொண்டது அனாஸின். ஆகையால்தான் அனாஸின் வலியிலிருந்து விரைவிலேயே நிவாரணமளிக்கிறது.

**நம்பகமானது:** டாக்டரின் நம்பகமான மருந்தைப் போல பல மருந்துகளின் கலவையே அனாஸின். ஆகையால்தான் லட்சக்கணக்கானவர்கள் அனாஸின் சாப்பிடுகிறார்கள்; சிபாரிசும் செய்கிறார்கள்.

*ஜலதோஷம் மற்றும் ஃப்ளூவினால் ஏற்படும் வலிகள், தலைவலி, முதுகுவலி, தசைவலி, பல்வலி ஆகியவற்றுக்கு அனாஸின் சக்திவாய்ந்த நிவாரணி.*



சக்தி வாய்ந்த, நம்பகமான
அனாஸின்

இந்தியாவின் புகழ் பெற்ற வலி–நிவாரணி

Regd. User of TM: Geoffrey Manners & Co., Ltd.

A/2/5-76

றைக்கும் யாராவது உன்னைக் கேலி பண்ணினார்களா, என்ன?'' என்று விசாரித்தாள்.

''இல்லேண்ணா!....''

''அந்த ஸ்கூட்டர் ஆசாமி உன் பக்கம்கூட இனிமேல் வரமாட்டான் பரிமளா!'' என்றான் பல்ராம்.

பரிமளாவும் பதிலேதும் சொல்லாமல் அப்பால் போய்விட்டாள்.

மறு நாள். வழக்கம்போல் காலை எட்டரை மணிக்குப் பல்ராம் கண் விழித்தபோது அவன் காதில்விழுந்தது கீழேயிருந்து தந்தைபோட்ட இரைச்சல்தான். ''இவனெல்லாம் உருப்படவே மாட்டான்!'' என்று தீர்ப்புச் சொல்லிக் கொண்டிருந்தார் அவர்.

'' என்ன துரை ! இன்னிக்கு யாரை உங்க கராத்தே அடியாலே வீழ்த்தப் போறீங்க ?'' என்று கேட்டார் அவனைக் கண்டதும்.

'' நீ நேத்து அடிச்சுத் தள்ளினியே, அவன் சாதாரண ஆள் இல்லேயடா.... ஈஸ்ட்–வெஸ்ட் மார்க்கெட்டிங் கம்பெனியின் மானேஜிங் டைரக்டர்..... அந்தக் கம்பெனியிலிருந்துதான் புதுசாக ஏஜன்ஸி லைன்ஸை எடுக்கிறதாக இருந்தோம்.... உன் கைங்கரியத்தினாலே அது கோவிந்தா ஆயிட்டுது! ஏன் நிக்கிறே ? போய், ஊற வைச்ச கொத்துக் கடலையைத் தின்னு, உடம்பை வளர்த்துக்க! மூளையைப் பத்திக் கவலைப் படாதே !.....'' என்று திட்டிவிட்டுப் போனார் தந்தை.

''என்ன அண்ணா, சொல்றார் அப்பா ?'' என்று கேட்டுக் கொண்டே வந்த பரிமளாவிடம் தான் அவளுக்காகப் பழி சுமக்க நேர்ந்த கதையைச் சொன்னான் பல்ராம். ''அந்த ஸ்கூட்டர். ஆளை ஒரு கராத்தே வெட்டு வெட்டினேன் பாரு....'' என்று அவன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, ''ஐயோ ! அவரையா நீ அடிச்சே ?'' என்று அலறினாள் பரிமளா.

''அதிகமில்லே.... ஒரே அடிதான். வாழை மரம்போலப் 'பொதேல்'னு சாஞ்சிட்டான்.''

''சீ ! நீயும் ஒரு மனுஷனா ! நீயும் ஒரு அண்ணனா !'' என்று பரிமளா திடுமெனச் சீறவும் திடுக்கிட்டான் பல்ராம். அதற்கு மேலும் தொடர்ந்த விஷயங்கள் அவனைச் சிலையாக்கின. அந்த அரும்பு மீசைக்காரனுக்கும் பரிமளாவுக்கும் 'இது'வாம்.... , அவன் ரொம்ப நல்லவனாம்.... ஏதாவது அவளைக் கிண்டல் பண்ணிக் கொண்டே இருப்பானாம். இவளும் ரசிப்பாளாம்....

''அப்படியானால் உன் பிளவுஸைப் பத்தி அவன் சொன்னதுக்கு மட்டும் ஏன் அப்படி அழுதியாம் ?....'' என்றான் பல்ராம்.

''இத்தனை நல்ல மனிதர் நம்மைப் பார்த்து அப்படிச் சொல்லும்படியாக அத்தனை மோசமாக டிரஸ் பண்ணிக் கொண்டோமே என்று தான் அழுதேன்......''

''போச்சுடா !'' என்று தலை மீது கை வைத்துக் கொண்டு உட்கார்ந்துவிட்டான் பல்ராம்.

அன்று மாலை கல்லூரிப் பக்கம் போகாமல் அந்த மிஸ் மிளகாய் வீட்டு வாசலில் போய் நின்றான் பல்ராம். அரை மணி தவம் கிடந்த பிறகு, கல்லூரியிலிருந்து திரும்பி வந்தாள் அவள்.

''மிஸ்... ஐயாம் வெரி ஸாரி.... உங்க அண்ணனுக்கும் என் தங்கைக்கும் 'இது' வாம்.... அது தெரியாமல் முரட்டுத்தனமாக நடந்து கொண்டு விட்டேன்.....''

''பரவாயில்லே... ரமேஷ் இஸ் ஆல்ரைட். உள்ளே வாருங்கள்.... காப்பி சாப்பிட்டு விட்டுப் போகலாம்.....''

ஒரு தட்டில் 'ஸ்வீட்' கொண்டு வந்து வைத்தாள். துணைக்குக் காராச்சேவும் வந்தது.

'' என்ன விஷயம் ? ஸ்வீட் தருகிறீர்களே?''

''குட் சமாசாரம்தான்..... எனக்குக் கல்யாணம் நிச்சயமாயிருக்கு.... நீங்க அன்னிக்குக் கேலி பண்ணினீங்களே, அதே சிவப்புப் புடவையைக் கட்டிக் கொண்டுதான் அவரை நமஸ்காரம் பண்ணினேன்..... அவருக்கு அந்தப் புடவையையும் சரி, என்னையும் சரி, ரொம்பப் பிடிச்சுப் போச்சாம்... இப்போ தான் டெலிபோன்லே பிள்ளை வீட்டார் கிட்டேயிருந்து தகவல் வந்ததாம்... அதற்காகத்தான் அம்மா ஸ்வீட் பண்ணியிருக்கிறாள்.... சாப்பிடுங்க....''

தான் விட்ட ஒரே குத்து, மூன்று குத்துகளாகத் தன் மீதே விழுந்த விந்தையை எண்ணிப் பார்த்தபடியே மைசூர்ப் பாகைக் கடித்தான் பல்ராம்.... நம்பினால் நம்புங்கள்– அது அவனுக்குச் சாத்தூர் மிளகாயாக உறைத்தது !






# அமரதாரா







அமரர் கல்கி

அத்தியாயம் 9

## நெருப்பாக ஒரு நெடுமூச்சு

மாசிலாமணி முதலியார் தம் மனைவியிடம், "இந்த வீட்டுக்காரர் என்ன, நாம் ஒரு நாள் தங்கினாலும் ஒரு மாதத்து வாடகை கொடுத்தாக வேண்டும் என்று சொல்லி விட்டுப் போகிறாரே; இது என்ன அநியாயம்?" என்று அலுத்துக் கொண்டார்.

"அந்தப் பிள்ளை அவரைத் தூக்கி அடிப்பது போல் பேசுகிறான். 'ஒரு மாதமென்ன மூனு மாத வாடகை வேணுமானாலும் வாங்கிக் கொள்ளுங்கள்' என்கிறான். இந்த மாதிரி ஊதாரியை நான் பார்த்ததே இல்லை" என்றாள் காமாட்சி.

"அவர் விளையாட்டுக்காக அப்படிச் சொன்னார் அம்மா!" என்றாள் கமலா.

இதற்குள் முன் பக்கம் சற்று நகங்கிப் போன கோலத்தில் வாசலில் கார் வந்து நின்றது. கல்யாணமும் பவானியும் இறங்கி உள்ளே வந்தார்கள்.

"ஆமாம்; விளையாட்டாகத்தான் சொன்னேன்" என்றான் கமலா கூறியதைக் கேட்டுக் கொண்டே வந்த கல்யாணம். "ரங்கநாத முதலியார் கடுமையாகப் பேசுகிறாரே ஒழிய ரொம்ப நல்லவர். நீங்கள் இருக்கிற நாளைக்கு வாடகை கொடுங்கள் வாங்கிக் கொள்வார்."

பவானி, "உங்களுக்கு இங்கே எல்லாம் வசதியாக இருக்கிறதா?" என்று கேட்டாள். "கல்யாணத்தைத் தேடிப் பிடித்து உங்களிடம் அனுப்புவதாகக் கூறிவிட்டு வந்தேன். ஆனால் இவரை நான் காண்பதற்கு முன் இவரே உங்களைப் பார்த்து விட்டார்."

"அப்படியொன்றும் வசதியான வீடு என்று சொல்வதற்கில்லை" என்றாள் காமாட்சி. "இந்தப் பழைய வீட்டுக்கு எழுபத்தைந்து ரூபாய் வாடகையாமே?"

"அப்படித்தான் சொல்வார். கொடுத்ததை வாங்கிக்கொள்வார்" என்றான் கல்யாணம்.

"ஏன் மாமா! சுவரிலே ஆணியே அடிக்கப் படாதோ? அக்காவின் கண்ணாடியை மாட்டுவதற்குக்கூட ஆணி அடிக்கக் கூடாதோ?" என்றான் விசு.

"அதிகமாக அடிக்கக் கூடாது. ஒன்றிரண்டு அடித்தால் பாதகமில்லை."

"என்னமோப்பா நீ நல்ல பிள்ளையாய் இருக்கிறாய். நாங்கள் இந்த ஊரிலே இருக்கும்வரையில் நீதான் எங்களைக் கவனித்துக் கொள்ள வேண்டும்."

"ஆகட்டும். உங்களுக்கு ஏதாவது வேண்டுமானால் இந்தப் பையனை அனுப்புங்கள். ஹோம்ரூல் கோபாலகிருஷ்ணன் வீடு என்று கேட்டால் சொல்லுவார்கள்."

"பிரமாதமா ஒண்ணும் வேண்டாம். நாலு எலெக்ட்ரிக் லைட் போட்டுக் கொடுத்து அம்மி, கல்லுரலுக்கு ஏற்பாடு பண்ணி, சமையல் அறையில் அடுப்பைக் கொஞ்சம் சரிப்படுத்தி விட்டால் போதும்."

"செய்துவிடலாம். நான் ரங்கநாதனிடம் பேசுகிறேன். முடித்துத் தருவார். தங்கமான மனுஷன்."

"அம்மா பசிக்கிறது" என்றான் விசு.

காமாட்சி மாசிலாமணி இருந்த பக்கம் திரும்பினாள். "ஏங்க, மார்க்கெட்டுக்குப் போய் ஏதாவது காய்கறி வாங்கிக்கொண்டு வருவதுதானே?" என்றாள். பிறகு, "அடி கமலா! ஏன் சும்மா நிற்கிறாய்? உள்ளே போய் அடுப்பு மூட்டு!" என்று அதட்டினாள்.

"விறகு இல்லையே அம்மா!" என்று நினைவூட்டினான் விசு.

கல்யாணம், "இன்று ராத்திரி சமையல் வைத்துக் கொள்ள வேண்டாம். ஹோட்டலிலிருந்து சாப்பாடு அனுப்பி விடுகிறேன்" என்றான்.

''நீ மகராஜனாய் இருப்பாய். அடி கமலா! காரியரைத் தேய்க்க வைச்சயா இல்லையா? எடுத்துக் கொடேன்.''

பவானியும் கல்யாணமும் விடைபெற்றுப் போனார்கள். ''ரொம்ப நல்ல பிள்ளை. இந்த மாதிரி நமக்கு ஒரு மாப்பிள்ளை கிடைக்கக்கூடாதோ?'' என்றாள் காமாட்சி.

''கிடைப்பான், கிடைப்பான். இவன் அப்பா இந்த ஊரிலேயே பெரிய வக்கீலாம்'' என்றார் மாசிலாமணி.

இந்தச் சமயத்தில் கமலா மெல்ல நழுவிக் காமிரா உள்ளில் இருந்தபடி ஜன்னல் வழியே வெளியே எட்டிப் பார்த்தாள். கல்யாணமும் பவானியும் சிரித்துப் பேசியபடி காரின் முன் புறம் அருகருகே அமர்வதைக் கண்டாள். கார் கிளம்பி விரைந்தது. நெடுமூச்சு ஒன்று அவள் நெஞ்சிலிருந்து அவளையும் அறியாமல் எழுந்தது. நெருப்பாக அவளைத் தகித்தது அது.

''இவன் தகப்பனார் பெரிய வக்கீலா யிருந்தால் என்ன? என் அப்பா கூடத்தான் தாசில்தார்'' என்று காமாட்சி சொல்லிக் கொண்டிருந்தாள்.

''போதும்; போதும்! உன் பிறந்த வீட்டுப் பெருமையை ஆரம்பித்து விடாதே! அவ்வளவு லஞ்சம் வாங்கிச் சேர்த்தாரே காலணா மிச்சம் வைத்து விட்டுப் போனாரா? அத்தனையையும் அழிச்சு ஒழிச்சார்.''

''ஐயய்யோ, அந்த உத்தமரைப் பற்றி அப்படிச் சொல்லாதீர்கள். பணம் காசைக் கையாலும் தொட மாட்டாரே!''

''லஞ்சம் வாங்குகிற எந்தப் பேர்வழி ஒத்துக் கொள்வான், தான் பணம் காசுக்கு ஆசைப்படுவதாக? அகப்பட்டுக் கொண்டால் வழக்காடக்கூட உண்டியல்தான் குலுக்குவான்.''

''போதுமே அம்மா உன் பேச்சு! பேசாமல் படுத்துக் கொள்ளேன்'' என்றாள் கமலா.

''இன்னும் சாப்பாட்டுக் கடையே முடியலையேடி?''

''அப்படியாவது அவா வாங்கி அனுப்பிச் சாப்பிடணுமா? அவரிடம் காசையாவது கொடுத்திருக்கக் கூடாதா? எனக்கு வேண்டாம் சாப்பாடு. எனக்குப் பிடிக்கவுமில்லை, பசிக்கவுமில்லை. போய்ப் படுத்துக்கறேன்'' என்றாள் கமலா.

'இது என்ன இந்தப் பெண்ணுக்குத் திடீரென்று அலுப்பு வந்து விட்டது?' என்று புரியாமல் கணவனைப் பார்த்தாள் காமாட்சி.

## அத்தியாயம் 10

# தலைகீழ் உலகம்!

**ரா**மப்பட்டணம் அட்வொகேட், 'ஹோம் ரூல்' கோபாலகிருஷ்ணன் வீடு ஜே ஜே என்று இருந்தது. சென்னையிலிருந்து வந்த உற்றார் உறவினரும் தெரிந்த மனிதர்களும் மட்டுமின்றி முன் பின் தெரியாதவர்கள் கூட ஒருசிலர் அந்தப் பெரிய வீட்டில் முகாமிட்டிருந்தனர். முற்றத்தின் இரு புறமும் இருந்த நாலு பெரிய அறைகள் இவர்களால் ஆக்கிரமிக்கப்பட்டிருந்தன.

பின்பக்கம் கிணற்றில் வாளியில் நீர் இழுத்துக் கொட்டிக் கொண்டு குளித்தபிறகு தலையைத் துவட்டியபடியே அப்போது மிகப் பிரபலமாயிருந்த தியாகராஜ பாகவதர் பாடல் ஒன்றைப் பாடியவாறு முற்றத்துக்கு வந்தான் கல்யாணசுந்தரம். முற்றத்தின் இரு பக்கமும் இருந்த நாலு அறைகளையும் நோட்டம் விட்டான். அவற்றின் வாசலில் ஜப்பான் அறை, ஜெர்மன் அறை, அமெரிக்கா அறை, பிரிட்டிஷ் அறை என்று பெயர்கள் வர்ண சாக்பீஸால் எழுதப்பட்டிருந்தன. இவர்களுள் யாரை அழைத்துக் குசலம் விசாரிக்கலாம் என்று சற்று நேரம் யோசித்தவனாக நின்ற கல்யாணம், கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தவனாக, ''ஜப்பான் மாமா! பொழுது விடிந்து எழுந்தாச்சா? ராத்திரி நன்றாய்த் தூங்கினீர்களா?'' என்று குரல் கொடுத்தான். முற்றத்தின் இடது பக்க அறை ஒன்றிலிருந்து குள்ளமாக ஒருவர் வெளிப்பட்டார். ''ஆகா! ஆனந்தமாகத் தூங்கினேன். லோகோபகாரிகளாக நீயும் உன் அப்பாவும் இருக்கிறபோது எனக்கு என்ன கவலை? கவலையே இல்லாததாலே தூக்கத்துக்கும் குறைவில்லை. ஆனா... ஒரு விஷயம் மட்டும் உன் காதிலே போட்டு வைக்கணும். கல்யாணம்! பக்கத்து அறையிலே இருக்கே ஒரு கடுவன் பூனை, அவன் விஷயத்தில் கொஞ்சம் ஜாக்கிரதையாக இரு!''

''ஏன்? என்ன நடந்தது?''

''நேற்று இரண்டணா கொடுத்து ஒரு வாரப் 'பத்திரிகை வாங்கிக் கொண்டு வந்து வைத்தேன்.' இன்று காலையில் காணோம். அவன்தான் எடுத்திருக்கணும். ஏன்னா அதிலிருந்த ஒரு விகடத் துணுக்கை இவன் பெண்டாட்டி கிட்டச் சொல்லிச் சிரித்துக் கொண்டிருந்தான். விடுவேனா பிடிச்சு வாங்கு வாங்குன்னு வாங்கிட்டேன்.''

''ஏன் ஜப்பான் மாமா, ஜெர்மன் மாமாவே அதைக் காசு கொடுத்து வாங்கியிருக்கக் கூடாதா?''

''அந்தக் கஞ்ச மகாபிரபுவா வாங்குவான்? நேற்று சாயந்திரம் ஹோட்டலுக்குள் நுழையறான்; எதிரேயே நான் நிக்கறேன். உபசாரத்துக்குக்கூட 'வா'ன்னு சொல்லலையே!''

''இதோ பாருங்க, நீங்க சண்டை போடறது பற்றி எனக்கு ஆட்சேபணை இல்லை. ஆனால் ஜப்பான் மாமாவாகிய நீங்கள் பக்கத்து அறைவாசியான ஜெர்மன் மாமாவோடு சண்டை பிடிக்கக் கூடாது. இரண்டு பேருமா சேர்ந்து கொண்டு எதிரே இருக்கும் பிரிட்டிஷ் அமெரிக்க அறைகளில் உள்ளவர்களோடு யுத்தம் பண்ணுங்கள்; வேண்டாம் என்று சொல்லவில்லை. ஆனால் சரித்திரத்தையே மாற்றி விடாதீர்கள்! என்ன, புரிந்ததா?''

ஜப்பான் அறை விருந்தினரைத் திருதிருவென்று விழிக்க வைத்து விட்டுக் கல்

யாணகந்தரம் ரேழிக்குப் பக்கத்தில் தன் தகப்பனாரின் காரியாலய அறையை அடைந்தான்.

அலமாரியைத் திறந்து சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டே, ''அப்பா! உலகமே தலைகீழாக மாறிப் போச்சு'' என்றான்.



காலைப் பத்திரிகையைச் சாவகாசமாக ராகம் போட்டுப் படித்துக் கொண்டிருந்த 'ஹோம்ரூல்' கோபால கிருஷ்ணன், சாய்வு நாற்காலியில் சற்று நிமிர்ந்து, ''கவனித்தேன், காதில் விழுந்தது'' என்றார்.

''அதைச் சொல்லவில்லை அப்பா. அலமாரிக்கு மேலே பாருங்கள்'' என்றான் கல்யாணம்.

மூக்குக் கண்ணாடியைச் சரி செய்துகொண்டு பத்திரிகையை ஓர் உதறு உதறிவிட்டு, அண்ணாந்து நோக்கினார், கோபாலகிருஷ்ணன். அங்கே மெய்யாலுமே உலகம் தலை கீழாக இருந்தது. ''சே! அந்த 'குளோ'பைச் சரியா நிமிர்த்தி வைடா. யார் செய்த விஷமம் இது?'' என்றார் தந்தை.

''ஒருவரும் விஷமம் பண்ணவில்லை. அம்மா நேற்று ஒட்டடை அடித்தாள். அப்போ அது ஒட்டடைக் கம்பு பட்டுக் கீழே விழுந்திருக்கும். திருப்பி வைக்கிறப்போ உலகத்தையே கவிழ்த்து விட்டாள்! இதனால் என்ன என்ன விபரீதம் எல்லாம் நேரப்போகிறதோ?''

''இதோ இப்போதே விபரீதம் வந்து கொண்டே இருக்கிறது'' என்றார் தம் மனைவி அறைக்குள் நுழைவதைக் கடைக்கண்ணால் நோக்கிவிட்ட கோபால கிருஷ்ணன்.

''விபரீதம் என்ன, பிரளயமே வந்தாலும் நீங்க மாற மாட்டேள். உங்க பிள்ளையும் மாற மாட்டான். நானும் தான் கேட்கிறேன், இது என்ன வீடா, லவலே ராம சாமி முதலியார் சத்திரமா? வீட்டில் கால் வைக்க இடமில்லையே? இப்படி உங்கள் பிள்ளை அக்கிரமம் பண்ணுகிறான். நீங்களும் தட்டிக் கேட்க மாட்டேன் என்கிறீர்கள்.''

''ஏன் உன் பிள்ளை இல்லையா? நீதான் கேளேன்!''

''நீங்கள்தான் அவனுக்குச் செல்லம் கொடுத்துக் கெடுத்துவிட்டீர்கள்.''

''நான் செல்லம் கொடுத்தேனா? உன் பேரே செல்லம். என் பேரில் பழியைப் போடுகிறாயே!''

''ஆமாம், எல்லாம் நான் சொல்கிறபடிதான் நடக்கிறதாக்கும்?''

''பின்னே, அப்பாவுக்கு 'ஹோம் ரூல் கோபால கிருஷ்ணன்'னு பெயர் வந்ததே அதனால்தானே அம்மா!''

''நீ சும்மா இருடா. எனக்கு இன்றைக்கு இரண்டிலொன்று தெரிந்தாக வேண்டும். இங்கே டேராப் போட்டிருக்கிறார்களே இவர்களெல்லாம் இன்னும் எத்தனை நாட்கள் இருக்கப் போகிறார்கள்?''

''யுத்தம் முடிகிற மட்டும்.''

''யுத்தம் எப்போ முடியும்?''

''ஹிட்லருக்கு ஃபோன் போட்டுக் கேட்டுச் சொல்றேன்'' என்றார் கோபாலகிருஷ்ணன். தந்தை மகன் இருவர் முகங்களிலும் புன்னகை அரும்பியது.

''கேட்கிறதை உடனே கேளுங்களேன். அதுக்குக் கூட வேளை, லக்னம் பார்க்கணுமா என்ன?'' என்று மேஜை மீதிருந்த ஃபோன் ரிஸீவரை எடுத்துக் கொடுத்தாள் செல்லம்.

கல்யாணம் குபீரென்று சிரித்தான். ஆனால் அவன் தந்தைக்குத் தம் மனைவியின் அறியாமையையும் வெகுளித்தனத்தையும் எண்ணியபோது நெஞ்சம் நெகிழ்ந்துவிட்டது.

'ஹோம் ரூல் என்று சொல்கிறோம். இயக்கம் கூட நடத்துகிறோம். ஆனால் சராசரி இந்திய மக்கள் இப்படி

## கண்ணம்மாவின் எழில்

**எங்கள் கண்ணம்மா நகை புது ரோஜாப்பூ;**
**எங்கள் கண்ணம்மா விழி இந்த்ர நீலப்பூ!**
**எங்கள் கண்ணம்மா முகஞ் செந்தாமரைப்பூ;**
**எங்கள் கண்ணம்மா நுதல் பால சூரியன்.**

— மகாகவி பாரதியார்

மேலட்டை வண்ணப்படம்: உத்ரா



அறியாமையில் மூழ்கி இருக்கும்போது வெள்ளைக்காரன் பொறுப்பை நம்மிடம் ஒப்படைத்து விட்டு எப்படி வெளியேறுவான்? அப்படியே அவன் வெளியேறினாலும் கிடைக்கும் சுதந்திரத்தை மக்கள் எப்படிப் போற்றிக் காப்பாற்றப் போகிறார்கள்?'' என்று சிந்தனையில் ஆழ்ந்தார்.

''அப்பா! அம்மாவுக்கு எல்லாம் விவரமாக விளக்கிச் சொல்லுங்கள். சாயந்திரம் வரை பொழுது போய் விடும். அதற்குள் நான் கிளப்புக்குப் போய் வந்து விடுகிறேன்'' என்று கூறிவிட்டுப் புறப்பட்டான் கல்யாண சுந்தரம்.

''காலை வேளையில் என்னடா கிளப்?'' என்றாள் செல்லம்.

''ஞாயிற்றுக் கிழமைதானே அம்மா? நாள் முழுவதும் நாடக ஒத்திகை நடக்கிறது. வரட்டுமா?''

அவள் பதிலுக்குக் காத்திராமல் அவன் புறப்பட்டு விட்டான்.

**ச**மூக சேவா சங்கம் இயங்கிய கட்டடத்தின் வாசலில் காரை நிறுத்திவிட்டுக் கல்யாணம் கீழே இறங்கியதும் இறங்காததுமாக ஒரு பையன் ஓடோடி வந்தான். ''ஸார்! மாஜிஸ்டிரேட்டுக்கு உங்களை ஒரு நிமிஷம் பார்க்க வேண்டுமாம்'' என்றான்.

''அப்படியா? இதோ!'' என்று கல்யாணம் கூறிவிட்டுத் தோட்டத்தில் ஒரு மரத்தடி நாற்காலியில் அமர்ந்திருந்த கோவர்த்தனனை நோக்கி நடந்தான். ''குட் மார்னிங்'' என்றதும், அவர், ''உட்காருங்கள் மிஸ்டர் கல்யாணம்; நாடகமெல்லாம் எந்த மட்டில் இருக்கிறது?'' என்று விசாரித்தார்.

''ஐந்தாறு நாட்கள்தானே ஒத்திகை நடந்திருக்கிறது? இன்னும் ஒரு மாதமாவது ஆகும் அரங்கேற.''

''கல்யாணம்! ஐ லைக் யூ. உங்க பரோபகார குணமும் ஊர் முழுக்கப் பிரசித்தி. அதை நான் வரவேற்கிறேன். சந்தோஷப்படறேன். இப்பக்கூடப் பர்மா அகதிகளுக்காக நிதி திரட்ட நாடகம் போடுகிறீர்கள். ரொம்ப 'நோபிள் மைண்ட்' இருந்தாத்தான் அப்படியெல்லாம் உதவத் தோன்றும். அதை நான் பாராட்டறேன். நானே உங்க நாடகத்துக்குத் தலைமை தாங்கி நடத்தித் தரதாக்கூட முடிவு செய்திருக்கேன். என்னால் எவ்வளவு முடியுமோ ஹெல்ப் பண்ணறேன்.''

''தாங்க்யூ ஸார்! தாங்க்யூ!'' என்று கல்யாணம் குதூகலத்துடன் சொன்னான். ''உங்க ஒத்துழைப்பு இருந்தால் எங்களுக்குப் பெரிய பலம்.''

''ஆனா ஒண்ணு, மிஸ்டர் கல்யாணம்! கொஞ்சம் யோசித்துப் பாருங்க. இருபது ஆண்பிள்ளைத் தடியன்களுக்கு மத்தியிலே ஒரு பெண்ணை இழுத்து நிக்க வைச்சு, நடிக்கச் சொல்றது நல்லா இருக்கா? இட் இஸ் நாட் கரெக்ட். அதுமட்டும் எனக்குப் பிடிக்கலே!''

''அழகுதான் போங்கள்!'' என்று சிரித்தான் கல்யாணம். ''எங்க நாடகக் குழுவிலே இருபதே பேர்தான். ஆனா இந்தக் கிளப்பிலே இருநூறு பேர் அங்கத்தினர்கள். இருநூறு தடியன்களுக்கு மத்தியில் அவளை இந்தக் கிளப்பில் சேர அழைப்பு விடுத்த நீங்களே இருபது தடியன்களுக்கு மத்தியில் அவள் நடிக்கக் கூடாது என்று சொல்வது என்ன நியாயம்? நீங்கள் தினம் அவளுடன் டென்னிஸ் ஆடலாம். நான் தினம் அவளுடன் சேர்ந்து நாடகத்துக்கு ஒத்திகை பார்க்கக் கூடாதா?''

''கல்யாணம்! புரியாதது மாதிரி நடிக்கிறீர்கள். நடிப்பெல்லாம் நாடகத்தோடு நிற்கட்டும். என்னுடன் அவள் டென்னிஸ் ஆடுவது வேறு; உங்கள் காதலியாக அவள் மேடை ஏறி நடிப்பது வேறு!''

''எப்படி வேறாக முடியும்? இரண்டும் இருவித விளையாட்டுத்தான். பொழுது போக்குத்தான்.''

''கல்யாணம் நான் உங்களோடு வாதாட விரும்பவில்லை. நீங்க செய்வது நன்றாயில்லை. எச்சரிக்கிறேன். அப்புறம் உங்க இஷ்டம்!''

அவர் தம் கையிலிருந்த வாக்கிங் ஸ்டிக்கை விளையாட்டாக உதறினார். அதில் மறைவாகப் பொருத்தப் பட்டிருந்த விசை காரணமாக மேலுறை கழன்று எட்டப் போய் விழ இதுகாறும் உள்ளே மறைந்திருந்த மிகக் கூர்மையான ஒரு நீண்ட கத்தி பளபளத்தது.

அதன் முனையை ஒரு விரலால் கூர் பார்த்த கோவர்த்தனன், ''என்ன அப்படி வியப்புடன் பார்க்கிறீர்கள் கல்யாணம்? நான் துப்பாக்கிகூட வைத்திருக்கிறேன். கைத் துப்பாக்கி, வேட்டைத் துப்பாக்கி எல்லாமே இருக்கின்றன. அவற்றுக்கு லைசென்ஸ்களும் வாங்கி வைத்திருக்கிறேன்!'' என்றார்.

கல்யாணம் விருட்டென்று எழுந்தான். ''மிஸ்டர் கோவர்த்தனன்! உங்களிடம் எனக்குள்ள மதிப்புக் குறையும்படி நடந்து கொள்ளாதீர்கள், ப்ளீஸ்!'' என்று கூறி விட்டுத் திரும்பி நடந்தான்.

அவனை முந்திக் கொண்டு, காலைச் சூரிய ஒளியில் பளபளத்தவாறு கத்தி பாய்ந்து சென்று அவனுக்கு முன்னாலிருந்த ஒரு மரத்தில் பதிந்து அதிர்ந்தது! குறி அரை யங்குலம் பிசகியிருந்தாலும் கத்தி அவனைத் தாக்கியிருக்கும். கல்யாணம் பிரமித்துப் போனான்.

பின்னால் கோவர்த்தனன் கலகலவென்று சிரிப்பது அவன் காதில் விழுந்தது!

(தொடரும்)

# மைசூர் ஸாண்டல் சோப் இந்தியக் கலாச்சாரப் போட்டி



**வண்ணம் தீட்டும் போட்டி**

16 வயதுக்குக் கீழுள்ள குழந்தைகளுக்கு
(1960 மே 31ந்தேதிக்குப் பிறகு பிறந்தவர்கள்.)

முழு விவரங்களுக்கு முக்கியமான
எந்தக் கடையிலிருந்தாவது
நுழைவுத் தாளைக் கேட்டு வாங்குங்கள்.
அல்லது எங்களுக்கு எழுதுங்கள்:
மைசூர் சேல்ஸ்
இண்டர்நேஷனல் லிமிடெட்
(எம்எஸ்ஐஎல்) (சோப் பிரிவு)
36, கன்னிங்ஹாம் ரோடு,
பெங்களூர் 560 052.



**ரூ. 25,000க்கும் மேல் மதிப்புள்ள பலவிதமான பரிசுகள்.**



**வெற்றிபெற்றவர்களின் குடும்பங்களுக்கு 30 போனஸ் பரிசுகள்**

MCA/MSIL/SS/54 tam



முந்துங்கள்!

**கடைசித் தேதி இப்போது 1976 ஜூன் 15 வரை நீடிக்கப்பட்டிருக்கிறது.**

**மைசூர் ஸாண்டல்**

**பாரதப் பெருமை பேசும் சுகபோக சோப்புகள்**

பெங்களூர் அரசினர் சோப் தொழிற்சாலையின் ஒரு தரமான தயாரிப்பு.
விற்பனை செய்பவர்கள் மைசூர் சேல்ஸ் இண்டர்நேஷனல் லிட்., பெங்களூர்.

# உயர்தரமான சுவைக்கும் உண்மையான சிக்கனத்திற்கும்

## ரிக்கரி
### இன்ஸ்டன்ட்




**அரை டீஸ்பூன் அளவே போதும்**

(தேவைக்கேற்ப குறைத்தோ அதிகமாகவோ உபயோகிக்கவும்)




**50 கிராம் சீசாவில் 37 கோப்பைகள்**

மற்றெந்த 50 கிராம் சீசாவை காட்டிலும் 7 கோப்பைகள் அதிகமாக ரிக்கரி அளிக்கிறது. ஏனெனில் ரிக்கரி ஸ்டிராங்கானது. இது சிக்கனத்திற்கு ஒரு சிறந்தவழி.

**அதிக ஸ்டிராங்கானது, அதிக மணமுள்ளதும்கூட:**

ருசியும், மணமும் மிகுந்த ஸ்டிராங்கான தயாரிப்பு. ஆகவே, ஒரு கோப்பை மணமும் ருசியும் மிக்க நல்ல காப்பிக்கு குறைந்த அளவு ரிக்கரியே போதும்.



**இப்போது ரிக்கரியின் விலை கணிசமாகக் குறைவு!**

50 கிராம் சீசாவுக்கு 50 பைசே விலை குறைக்கப்பட்டுள்ளது.

## ரிக்கரி
### இன்ஸ்டன்ட்

**வறுத்து அரைத்த காப்பியின் சுவையை ஏறக்குறைய அதே விலையில் உங்களுக்கு அளிக்கிறது**

NRCM-27-75TAM



ஸ்ரீ வேதாந்த தேசிகர்

# தயை வேண்டும் இசை

அரசாங்க ஊழியர் ஒருவர் அந்த உயர் அதிகாரியிடம் வந்தார். ''எனக்குக் கிடைக்க வேண்டிய உத்தியோக உயர்வு இன்னாருக்குப் போய் விட்டது. நீங்கள் ஏதும் செய்ய வேண்டும்'' என்றார்.

அந்த அதிகாரி, ''நீங்கள் நினைப்பது போல் தவறு ஏதும் நேரவில்லை. விதிமுறைகள்படியே காரியம் நடந்துள்ளது'' என்று சொன்னார்.

ஊழியர் சற்று நேரம் வாதாடிப் பார்த்துப் பயனில்லை என்று உணர்ந்து கிளம்புமுன் கடைசி முறையாக, ''எஜமானி அம்மாவைக் கூப்பிடுங்கள், ஒரு நிமிஷம் பார்த்துவிட்டுப் போகிறேன்'' என்றார்.

அந்த அதிகாரிக்கு அப்போது கல்யாணமே ஆகவில்லை. சிரித்துக் கொண்டே அதைத் தெரியப்படுத்தி ஊழியரை அனுப்பி வைத்தார். ஆனால் அந்த வினாடியில் அவருக்கு ஒரு விஷயம் புரிந்தது : தயை என்பதை ஆண்களைவிடப் பெண்களிடமே அதிகமாகப் பெற முடியும் ; அதனால்தான் தம்மிடம் கிடைக்காததைத் தம் மனைவி மூலம் பெற முயன்றார் அந்த ஊழியர்.



ஸ்ரீமதி மணி கிருஷ்ணசாமி

அந்த உயர் அதிகாரி, பின்னாளில் தமிழக உயர்நீதிமன்றத்தின் பிரதம நீதிபதியாகவே உயர்ந்த திரு அனந்தநாராயணன். தற்போது ஓய்வுபெற்றுள்ள அவர், ஸ்ரீ வேதாந்த தேசிகரின் தயா சதகம் பற்றிக் கூறுகையில் மேற்படி சம்பவத்தை விவரித்துத் தயை என்பதைப் பெண்ணாக உருவகப்படுத்தியுள்ள அழகை உணர்த்தினார். அவர் மேலும் சொன்னார் :

''இந்தத் தயை திருப்பதி வேங்கடாசலபதியிடமிருந்து தனித்தும் இயங்குகிறது; அதே சமயம் அவரிடமிருந்து இணைபிரியாத நிலையிலும் இருக்கிறது. அது ஏழு மலைகளிலும் அருவிகளாகச் சொரிந்து ஆறுகளாக விரையும் நீரைப் போன்று குளிர்ச்சியானது. அதில் மூழ்கித் திளைக்கலாம்.''

ஸ்ரீ வேதாந்த தேசிகர் வர்ணிக்கும் நீதிமன்றக் காட்சி ஒன்று முன்னாள் பிரதம நீதிபதியின் மனத்தைக் கவர்ந்ததில் வியப்பில்லை. அங்கே நீதிபதியாகப் பெருமாளே அமர்ந்திருக்க, தம் மீது குற்றச்சாட்டுக்களைச் சுமத்தும் அரசத் தரப்பு வக்கீல்களாகப் பாபங்கள் வந்து நிற்பதைக் காண்கிறார், ஸ்ரீதேசிகர். ஆனால் இவர் மனம் கசிந்துருகி வேண்ட தயை இவர் தரப்பில் வாதாட வருகிறாள். ஒரே கணத்தில் எதிர்த்தரப்பு வாதங்களைத் தவிடுபொடியாக்கி ரட்சிக்கிறாள்.

இவ்வளவு அழகிய கருத்துக்களைக்கொண்ட 108 சுலோகங்களை ஸ்ரீமதி மணி கிருஷ்ணசுவாமி கணீரென்ற குரலில் எல். பி. இசைத்தட்டாகப் பதிவு செய்திருக்கிறார். வெளியீட்டு விழாவின் போது திரு அனந்தநாராயணன், சிரமமான உச்சரிப்புக்களைக் கொண்ட சமஸ்கிருத சுலோகங்களை மிகத் தெளிவாகத் தவறின்றி பாடியுள்ளதையும் பொருத்தமான ராகங்களைத் தேர்ந்தெடுத்துள்ள நேர்த்தியையும் பாராட்டினார். ''தாளத்துக்கு அமைத்துப் பாட வேண்டியதில்லை; வடமொழி சுலோகங்களின் உச்சரிப்பே ஒரு தாளகதிக்கு உட்பட்டிருப்பதை உணர்ந்திருப்பதே விசேஷம்'' என்றார்.

''பாட்டிலே ஏதும் தோஷம் இருந்தால் அவற்றை நிவர்த்திக்கும் சக்தி பெற்றவையாகச் சுருட்டி, மத்யமாவதி, சௌராஷ்டிரம் ஆகியவற்றைக் கருதிக் கடைசியில் பாடுவார்கள். மணி கிருஷ்ணசுவாமி கடைசி ராகமாக சௌராஷ்டிரத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறார். ஆனால் அவர் இசைத்தட்டிலே நானறிந்தவரை ஒரு தோஷத்தையும் காணவில்லை'' என்றார் முன்னாள் நீதிபதி. இதற்கு அதிகமாக யார் என்ன பாராட்டை ஸ்ரீமதி மணி கிருஷ்ணசுவாமிக்கு வழங்கிவிடமுடியும்?

இசைத்தட்டின் ராயல்டி தொகை முழுவதும் திருப்பதி தேவஸ்தானத்துக்குப் போகிறது. இதற்குப் பதிலாகத் தயை எங்கும் நிறைந்து தர்மம் தழைக்கவும் போகிறது.

— குட்டிகிருஷ்ணன்



மீராவுக்குக் காயம் படும்போது

# நோய் தொற்றாமல் தம்மைப் பாதுகாக்க, அவர் BAND-AID BRAND டிரஸ்ஸிங்குகளையே நம்புகிறார்.

காயங்கள் திறந்திருந்தால், தொற்று நோய் பரவக்கூடும். **பாண்டு-எய்ட்** பிராண்ட் டிரஸ்ஸிங்குகளால் அவற்றைப் பாதுகாருங்கள்.

**பாண்டு-எய்ட்** பிராண்ட் டிரஸ்ஸிங்குகள் நோய்க் கிருமி தொற்றாமல் காயங்களைக் காக்கின்றன. அவற்றிலுள்ள நிருபணமான ஆண்டிசெப்டிக் மருந்து **மெர்க்கியூரோக்-ரோம்,** பிளவுபட்ட சருமத்துக்கு இதமளித்து ஆற்ற உதவுகிறது.

**பாண்டு-எய்ட்** பிராண்ட் டிரஸ்ஸிங்குகளைப் பயன்படுத்தி, முன்ஜாக்கிரதையுடன் இருங்கள். எப்பொழுதும் சில டிரஸ்ஸிங்குகள் கைவசம் இருக்கட்டும்.

பாண்டு-எய்ட் பிராண்ட் டிரஸ்ஸிங்குகளை ஜான்ஸன் & ஜான்ஸன் மட்டுமே தயாரிக்கிறார்கள்.

*Johnson & Johnson**




மெர்க்கியூரோக்ரோம் மருந்து கலக்கப்பட்டது.

# உண்மையே உன் விலை என்ன?

‘உலகில் எந்தப் பொருளுக்கும் ஒரு விலை உண்டு. உண்மைக்கும் ஒரு விலை உண்டு’ என்று பணத் திமிர் கொண்ட ஓர் அயோக்கியன் கருதிச் செயல்படுகிறான். அவன் வென்றானா, உண்மை வென்றதா என்பதுதான் திரைக்கதையின் கரு.

இந்த ‘ஸீரியஸ்’ கதைக்கு நகைச்சுவையூட்டிச் சுவாரசியமாய்க் கொண்டு போகத் தனி ஹாஸ்யக் கதை ஒட்டவைக்கப்படாதது இப்படத்தின் தனிச் சிறப்பு. திரைக் கதையின் முக்கிய பாத்திரமான அட்வகேட் சத்யநாராயணா ஒருவர் போதும், படத்தின் நகைச்சுவைக்கு. காட்சிக்குக் காட்சி, பேச்சுக்குப் பேச்சு நகைச்சுவையை ‘மொத்தமாகவும் சில்லறையாகவும்’ வாரி வழங்குகிறார். அவர் ஆந்திர மாநிலத்தைச் சேர்ந்தவர்; அவர் மனைவி தமிழ் நாட்டைச் சேர்ந்தவர். இதுவே மிகவும் சுவையான சேர்க்கை. இந்த அதிசயத் தம்பதிக்கு ஓர் அற்புத மகன். அவன் வெறும் காமெடிப் பாத்திரமாக மட்டும் அல்லாமல், திரைக் கதையின் முக்கியமான திருப்பங்களில் கை கொடுத்து உதவும் பாத்திரமாகவும் அமைகிறான்.

அட்வகேட் சத்தியநாராயணாவுக்கு ‘சோ’வை விட்டால் சரியான நடிகர் கிடைப்பது சிரமம். தெலுங்கையும் தமிழையும் கலந்து அவர் பேசும் போதே அதனோடு நகைச்சுவையும் பிறந்து விடுகிறது. அவருக்கு ஈடு கொடுப்பவர் சுகுமாரி. ஜோடி அற்புதமாகப் பொருந்துகிறது. (ஆனால் காமெடி என்பதற்காக எதை வேண்டுமானாலும் பேசலாமா என்ன? சில இடங்களில் குரூரமாயிருக்கிறதே!)

அட்வகேட் சத்திய நாராயணாவின் மகன் வெங்கட்டாக வரும் ஸ்ரீகாந்த் பொறுப்பில்லாத ‘டீன் ஏஜராக’ வந்தாலும் பொறுப்போடு நடித்திருக்கிறார்.

இந்தப் படத்துக்கு ஹீரோ மட்டும்தான் உண்டு. ஹீரோயின் கிடையாது. பாதிரி அருமைநாயகம்தான் ஹீரோ! அந்தப் பாத்திரத்துக்கு முத்துராமன் மிகவும் பொருத்தமானவர் - அருமையான செலக்ஷன்! அடேயப்பா! அவர் முகத்தில்தான் எத்தனை சாந்தம்! எத்தனை அமைதி! நடையில் எத்தனை கம்பீரம்! பார்வையிலேயே நடித்து விடுகிறார். உண்மை, அஞ்சாமை, நேர்மை, தியாகம், தெய்வ நம்பிக்கை போன்ற உயர்ந்த குணங்களைத் தம் நடிப்பில் அதியற்புதமாக வெளிப்படுத்துகிறார்.

பத்திரிகை நிருபராக வரும் மனோரமா நகைச்சுவைக்கும் துணை நிற்கிறார். அவர் பேச்சில் பழைய விகடத் துணுக்குகள் பல வந்தாலும் ‘குபுக்’கென்று சிரிப்பு வருகிறது.

படத்தின் கவர்ச்சிக்குப் பத்மப் பிரியா வருகிறார். விநியோகஸ்தர்களைத் திருப்திப்படுத்தி நம் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ள ஆலத்தின் (அரை குறை ஆடை) அலங்கோல நடனம் வருகிறது. படத்தின் விறுவிறுப்பையும், சுவையையும் கெடுக்கப் பாடல்கள் இருக்கின்றவே! இன்னும் என்ன வேண்டும்!

கதை, வசனம், டைரக்ஷன் ஆகியவற்றில் ‘சோ’வின் திறமையும், அநுபவமும் பளிச்சிடுகின்றன. ஒவ்வொரு பாத்திரத்துக்கும் ஏற்ற வகையில் வசனம் அமைந்திருப்பதோடு சிக்கனமும் கையாளப்பட்டிருக்கிறது.

மேடையில் பல முறை அரங்கேறி, ‘‘கல்கி’யில் தொடர் நாடகமாகப் பிரசுரமான இரட்டைப் பெருமை இதற்கு உண்டு.

புதுமையான கருத்தைக் கொண்டது. அருமையான கதை அம்சத்தைக் கொண்டது. ‘‘உண்மையே உன் விலை என்ன?’’

— காந்தன்





# பொன்னியின் புதல்வர்

சுந்தா

## 33. தோழமைத் தோற்றங்கள்

அகநக நட்பே யாயினும் அதனை
முகநகக் காட்டவும் வேண்டும்

சொந்த முறையில் வரும் கடிதங்களைப் பைசல் செய்வதற்கு எளிதான முறை ஒன்றைக் கல்கி கையாண்டார்; படித்தவுடன் கிழித்துப் போடுவதுதான் அந்த முறை. ஒரு சமயம் ஒரு கடிதத்தை அதனுடன் இணைத்திருந்த செக்குடன் சேர்த்துக் கிழித்துப் போட்டு விட்டாராம். விதிவிலக்காக, ராஜாஜி டி.கே.சி. ஆகிய இருவரின் கடிதங்களை மட்டும் பாதுகாத்து வைத்துக் கொண்டார்.

வந்த கடிதங்களுக்குக் கல்கி எழுதிய பதில்கள் கொஞ்சம்; எழுதாதவை அனந்தம். எல்லாக் கடிதங்களுக்கும் அவர் பதில் எழுத முற்பட்டிருந்தால், கதை கட்டுரைகள் எழுத நேரம் இருந்திராது. அவருடைய பதிலை எதிர்பாராமல், அடுத்தடுத்தும் அதிகமாகவும் அவருக்குக் கடிதம் எழுதியவர்களில், டி. கே. சி.க்கு இணையாகச் சொல்லத் தக்கவர் விட்டலபுரம் வேங்கடாச்சாரி. ஒரு சமயம், தமது கடிதங்கள் சிலவற்றுக்குக் கல்கியிடமிருந்து பதில் வராததைக் கண்ட வேங்கடாச்சாரி, அது பற்றித் தம் மனக்குறையை வெளியிட்டு எழுதினார். அது கல்கியின் மனத்தை உறுத்தியபடியால், உடனேயே அதற்குப் பதில் எழுதிச் சமாதானம் கூறினார் :

(சென்னை 20–8–45) தங்களுடைய கடிதங்கள் எனக்கு எப்போதும் உற்சாகம் அளிக்கின்றன. தங்களுடைய மற்றொரு நண்பரைப் போல் கடிதங்களை நான் தொந்தரவாகக் கருதுவதில்லை. ஒத்த அபிப்பிராயங்களை உடையவர்களின் கடிதங்கள் எனக்கு மகிழ்ச்சி தரும்; விரோத அபிப்பிராயங்கள் கொண்ட. கடிதங்கள் அதிக மகிழ்ச்சி தரும்...

சில சமயம் பல காரணங்களை முன்னிட்டு மனத்தில் உள்ள உணர்ச்சிகளை அடக்கி, வெந்நீரை விளாவிக் குளிரச் செய்து, பத்திரிகையில் எழுதவேண்டியிருக்கிறது. அதைத் தாங்கள் கண்டு பிடித்துவிடுவது எனக்கு வியப்பும் மகிழ்ச்சியும் ஒருங்கே தருகிறது.

கவர்ன்மெண்டு தபால் இலாகாவுக்குப் பணம் சேர்ந்தாலும் சேரட்டும் என்று கடிதம் எழுதுங்கள். என்னிடமிருந்து பதில் உடனுக்குடன் வராவிட்டாலும், தயவுசெய்து எழுதுங்கள். பதில் வராவிட்டால், தங்கள் கடிதத்தில் உள்ள விஷயங்களை யோசித்தோ அல்லது அனுபவித்தோ முடிவு பெறவில்லை என்று வைத்துக் கொள்ளுங்கள்.

இதிலிருந்து என்ன தெரிகிறது? நண்பர்களின் கடிதங்களைக் கல்கி வரவேற்றார்; உவந்து படித்தார். அவை மூலம் வளர்ந்த நல்லுறவை விரும்பினார். தம் எழுத்துக்களைப் பற்றி அவற்றில் இருக்கக் கூடிய பாராட்டையும் மதிப்பீட்டையும் கண்டு மகிழ்ந்தார். ஆனால் அவை எல்லாவற்றுக்கும் பதில் போட நேரமின்றிச் சங்கடப்பட்டார்.

நண்பர்களும் வியப்பாளர்களும் தம்மைக் காண வருவதையும் அவர்



விரும்பினர். ஆனால், அவர்களுக்குத் திருப்தி அளிக்கும் அளவுக்கு அவர்களுடன் பேசிக் கொண்டிருக்கப் போதிய நேரம் இருக்கவில்லை. அத்துடன், அவருடைய மன நிலையும் உள்நோக்குக்கும் புறநோக்குக்கும் இடையே ஊசலாடிக் கொண்டிருந்தது. ஒரு புறம், சிந்தனையாளர், இலக்கியப் படைப்பாளர் என்ற முறையில் அவருக்குத் தனிமை வேண்டியதாய் இருந்தது. இன்னொரு புறம், பொதுப் பணிகளிலும் இயக்கங்களிலும் ஈடுபட்டவர் என்ற முறையில், பிறருடைய பழக்கமும் தோழமையும் வேண்டி இருந்தன. இரண்டுக்கும் என்று தனித் தனியே நேரத்தைப் பங்கீடு செய்து ஒதுக்குவது சாத்தியமாய் இல்லை. அதன் காரணமாய், அவருடைய சுபாவத்தை வெவ்வேறு சமயங்களில் வெவ்வேறு விதமாய் நண்பர்கள் கண்டார்கள் — புதிய நண்பர்களும் சரி, பழைய நண்பர்களும் சரி. அவருடன் பழகியவர்களில் சிலர் அவருடைய இனிய சுபாவத்தை மெச்சினர்கள்; ''எவ்வளவு அன்பாய்ப் பழகினர் தெரியுமா!'' என்று வியந்து சொன்னர்கள். வேறு சிலரோ, ''அவர் சரியாய்ப் பேசவில்லை'' என்றோ, ''பேசவே இல்லை'' என்றோ குறை கூறி வருத்தப்பட்டார்கள். ஒருவரே இரு வித அனுபவங்களை அடைந்ததும் உண்டு.

உற்சாகமான உரையாடலுக்கு இடையே, எப்படித் திடீரெனக் கல்கியின் மனம் உள்நோக்காகத் திரும்பி விடும் என்பதை, பேராசிரியர் சீநிவாசராகவன் விவரித்துச்சொல்லிஇருக்கிறார்:

யாரைச் சந்தித்தாலும் அவரவர் துறைக்குப் பேச்சைத் திருப்பி, அவர்களைப் பேச விட்டு — தம் துறையைப் பற்றி யார்தான் ஆர்வத்தோடு பேசமாட்டார்கள்? — அந்த ஆர்வத்தைப் பூரணமாக ரசிப்பது கல்கியின் பண்பு. சங்கீதக்காரர் வந்தால் பேச்சு ஒரே சங்கீதமயமாகிவிடும். பேச்சே நின்று சங்கீதமே வந்துவிடும். டி. கே. சி. வந்தால் தமிழ்ப் பாடல் அரசாளும். மாலி வந்தால் சித்திரம் தன்னைப் பற்றிப் பேசும். ஸ்ரீமதி ஜயம்மாளோ பாலசரஸ்வதியோ தோன்றினல், பேச்சிலே பரதம் தோன்றும். திருநெல்வேலி ஆசிரியர்கள் நிலைமை, வட ஆர்க்காட்டில் உணவுப் பஞ்சம், கும்பகோணத்தில் அன்னதானம், எட்டயபுரத்திலே பாரதிமண்டபம் — யார் யார் எந்தெந்தத் துறையிலே ஈடுபட்டுக் கல்கியிடம் வருகிறர்களோ, அவர்களை அதிலேயே திருப்பி விட்டுப் பேச்சைக்







தோழமைத் தோற்றம் (1) ராஜாஜீ-கல்கி. தோழமைத் தோற்றம் (2) டி. கே. சி. கல்கி. தோழமைத் தோற்றம் (3) காசா சுப்பாராவ் - கல்கி. தோழமைத் தோற்றம் (4) சதாசிவம் - கல்கி (பின்னணியில் தாஜ்மகல்.)

## அனுப்பாத கடிதங்கள்!



(ஆசிரியருக்குக் கடிதங்கள் அறுவையாக இல்லாமல் ரசமான அனுபவங்களைக் கூறுமேயானால்....) இரு உதாரணங்கள்:)

அன்புள்ள ஆசிரியருக்கு,

அன்றொரு நாள் ஒரு ருசிகரமான சம்பவம் நடந்தது. நாலைந்து கல்லூரிப் பெண்கள் என்னிடம் ஒரு தெருவுக்கு வழி கேட்டார்கள். அதுவோ தொலைவில் ஒரு சந்துக்குள் இருந்தது. அதனால் நானே அவர்களைக் கொண்டு விட்டேன். அவர்களில் ஒருத்திதான் இன்று என் மனைவி!

அன்புள்ள ஆசிரியருக்கு,

என்னுடைய பியூன், தன் ஊரிலிருந்து தன் பாட்டி இறந்துவிட்டதாகவும் அதற்காக இரண்டு நாட்கள் லீவு வேண்டும் என்றும் தந்தி கொடுத்திருந்தான்.

அதற்கு முதல் வாரம்தான் அத்தை இறந்துவிட்டதாக மூன்று நாட்கள் லீவு எடுத்திருந்தான்.

எனக்குப் பொறுக்கவில்லை. நான் மறு தந்தி அடித்தேன். "உன் நிலைமை புரிகிறது. கவலை வேண்டாம். ஒரு மாதம் லீவு தருகிறேன். மொத்தமாக எல்லா உறவினர்களுக்கும் ஏற்பாடு செய்துவிட்டு வரவும்" என்று.

-- வி. ராதாகிருஷ்ணன்

---

கேட்டுக் கொண்டிருப்பார்; உற்சாகமாகவும் கேட்பார். "பேஷ், பேஷ்!" என்ற அவருடைய உற்சாக முத்திரை அடிக்கடி மற்றவர் பேச்சைத் தூண்டும். ஆனால் அதோடு, மற்றவர் பேசிக் கொண்டிருக்கும்போது, சிற்சில சமயங்களில் பேச்சையெல்லாம் மறந்து எங்கேயோ சித்தனை உலகம் ஒன்றுக்குப் போய் விடுவார். அவருடைய கூர்மையான அறிவினும், சலியாத கற்பனையினாலும் உண்டாகும் நிலை இது. நம்முடைய பேச்சில் மூளைத்த ஏதோ ஒரு குறிப்பு, ஒரு செய்தி காரணமாய்த் தமக்குள்ளேயே மிக வேகமாக எண்ண உலகில் அவர் சஞ்சரிக்க முற்படுவதால், நம்மை மறந்து விட்டாரோ என்றுகூடத் தோன்றும். இதை உணராமல் அவர் பேரில் கசந்து சென்றவர்களும் உண்டு.

(திருச்சி வானொலிப் பேச்சு 13-10-55)

அடுத்து, பேராசிரியரைவிட அதிகமாகவே கல்கியுடன் பழகிய ஆக்கூர் அனந்தாச்சாரி, இதன் தொடர்பாய் என்ன சொன்னார் என்பதைப் பார்ப்போம். கடந்த அத்தியாயத்தில் குறிப்பிட்ட பாரதியார் சங்கப் பிரசுரத்தில் உள்ள கருத்து இது — கல்கிக்கு அஞ்சலியாக வெளியானது:

கால் நூற்றாண்டுக்கு மேலாக அவரை நான் அறிவேன். ஆனால் கடந்த ஏழு ஆண்டுகளாகத்தான் நெருங்கிப் பழகினேன். வெகு காலமாகச் சற்றுத் தூரத்திலேயே இருந்து வந்த எனக்கு அத்தகைய பாக்கியம் ஏற்பட்டதற்குக் காரணம் அன்னார் பாரதியார் விஷயத்தில் காட்டிய அளவற்ற பக்தியும் சிரத்தையும் தான். அவரது முத்தைய மன நிலையிலும் போக்கிலும் சென்ற இரண்டு வருட காலமாக விசேஷ மாறுதல் ஏற்பட்டது. எல்லோரும் விரும்பும்படியான வகையிலே அவர் நடந்து கொண்டார். தம்மாலானவரை எல்லோருக்கும் நன்மை செய்ய வேண்டும் என்கிற எண்ணம் அவர் மனத்தில் குடி கொண்டிருந்தது.

அவர் நோயுற்றிருந்தபோது அவரை முதலில் ஜெனரல் ஆஸ்பத்திரியிலும் பிறகு அவர் வீட்டிலும் மும்முறை சந்தித்துப் பேசினேன். நண்பர்களைக் காண்பதில் தமக்கு ஏற்படும் மகிழ்ச்சியையும் மன ஆறுதலையும் வெளிப்படையாகக் கூறினார்.

எந்த நோயற்ற நிலை அப்போது கல்கியின் தோழமை உணர்ச்சியைப் பெருகச் செய்ததோ, அதுவே முன்பொரு சமயம் அதைக் குறுகச் செய்தது. 1953 மத்தியில் நோய்ப் படுக்கையிலிருந்து டி. கே. சி.க்கு எழுதிய கடிதம் ஒன்றில், எல்லாம் வெறுப்பாகத் தோன்றிய தமது மன நிலை குறித்துக் குறைப்பட்டுக் கொண்டார் போலும். அதற்கு ரசிகமணி பதில் எழுதுகையில், நோயின் கொடுமையினால் அப்படி யெல்லாம் தோன்றும் என்றும், "நோய் நீங்கின மாத்திரத்தில் நம்மை அறியாமலே மனசுக்கு உற்சாகம் பிறந்துவிடும்" என்றும் தேற்றினார். "அந்த உற்சாகத்துக்கு நாம் கொஞ்சம் இடம் கொடுக்கலாம் அல்லவா?"

தாராளமாய் உற்சாகத்துக்கு இடம் கொடுக்கக் கூடியவர்தான் கல்கி; அத்துடன், நோயின் படுத்தலுக்கு எளிதிலே இடம் கொடாதவர். அதற்கு முந்திய ஆண்டுத் தொடக்கத்தில், டி. கே. சி.யின் பேத்தி (செல்லையாவின் மகள்) தங்கம்மாளுக்குக் குற்றாலத்தில் திருமணம் நடந்தபோது, அதில் கலந்து கொள்ளக் குடும்பத்துடன் கல்கி புறப்பட்டுச் சென்றதை, அதற்கு ஓர் உதாரணமாய்ச் சொல்லலாம். அப்போது நோயின் கொடுமையை எப்படி அவர் அன்பினால் அடக்கிக் கொண்டார் என்பதை, கல்யாணத்துக்குப் பிறகு, ராஜாஜிக்கு டி. கே. சி. எழுதிய கடிதம் ஒன்றிலிருந்து தெரிந்து கொள்ளலாம்:

*(5—2—52) கல்யாணத்தைச் சிறப்பிக்கக் குடும்பம் குடும்பமாகவே வந்தார்கள். நண்பர்களும் தாய்மார்களும் கூடமாக வந்ததில்*

கல்கத்தாவில் போக்குவரத்து விளக்கில் சிவப்பு வந்த பிறகும் பாய்ந்து சென்றது ஒரு சிட்டி பஸ். பஸ்ஸுக்குப் பின்னால் எழுதப்பட்டிருந்த வாசகம் 'The Nation is on the move'
ஸ்டேட்ஸ்மேன் — பாபு



எவ்வளவோ சந்தோஷம்தான். ஆனாலும் கலப்பில்லாத சந்தோஷம் என்று சொல்லிவிட முடியாது. நானூறு மைல்களுக்கு இப்பால் காட்டுக்குள் இருந்து கொண்டு, அத்தனை பேருக்கும் சிரமம் கொடுத்துவிட்டோமே என்று குத்தத்தான் செய்கிறது மனசை.

தாங்கள் வராதது பெரும் குறைதான். ஆனால் அது கடவுள் நியதியோடு சேர்ந்த காரியம். நொந்துகொள்ள வேண்டிய காரியம் அல்ல.

கல்கி அவர்கள் அகஸ்மாத்தாய்த்தான் வந்து சேர்ந்தார்கள். உடம்பு வஞ்சித்துவிட்டது அவர்களை. (சென்னையில்) ரயில் ஏறிய பிறகு இழுப்பு வேதனை வந்தது. கீழே இறங்க முடியாதபடி ரயிலும் புறப்பட்டுவிட்டது. வழி நெடுகிலும் வேதனையைச் சகித்துக் கொண்டு, அந்த வேதனையுடனேயே குற்றாலம் வந்து சேர்ந்தார்கள். வேதனையைச் சகித்துக் கொண்டே கல்யாணக் கூட்டத்தோடு உல்லாசமாய் உறவாடிக் கொண்டிருந்தார்கள்.

எல்லாம் கல்கி மயந்தான் என்பது எனக்குத் தெரியும். தமிழ் நாட்டையே ஒன்று சேர்த்துக் குற்றாலத்துக்குக் கொண்டு வந்தது கல்கியின் மயந்தான். அந்த மயத்தில் நானும் ஒரு சிறு அம்சம்.

அவர்கள் வராதிருந்தால் எனக்குப் பெரும் ஆற்றாமையாக இருந்திருக்கும். எப்படியோ எல்லாம் வல்ல இறைவன் எல்லாவற்றையும் சுகமாகக் கூட்டி முடிக்கிறான்.

எழுத்து இருக்கட்டும். கீழ்ப்பாக்கத்தில் இருக்கும்போது நேரில் சொல்லி ஆற்றாமையைத் தீர்த்துக் கொள்வோம் என்றாலோ, ஆசிரியருக்கு நேரம் இல்லை. இப்படியே பல நாள் ஏமாற்றம் அடைந்திருக்கிறேன்.

* * *

கல்கி அவர்களைப் போல் பத்திரிகை ஆசிரியர் இனிமேல்தான் பிறக்க வேண்டும். வாசகர்களுக்கு விஷயமெல்லாம் எளிதாயிருக்க வேண்டுமே, ரஸமாய் இருக்க வேண்டுமே என்று, சதா கவலைப்பட்டுக் கொண்டிருக்கிற வேறொரு பத்திரிகாசிரியர் கிடையாது. எப்போதுமே இதே நினைப்பாக அவர் இருப்பார். ஆகவே விருந்தாளியாக நான் சென்னைக்கு வரும்போது, என்னை அவ்வளவாகக் கவனிக்கக்கூட மாட்டார். யாருக்கோ வந்த விருந்தாளி என்று கவனியாமல் இருப்பதாக மற்றவர்களுக்குப் பட்டுவிடும். ஆனால் விஷயம் அப்படி இல்லை. நான் சென்னையில் அவர் வீட்டுக்கு வந்ததும், நான்தான் அவர் வீட்டுக்கு உடையவனாகி விடுகிறேன். கல்கி ஆசிரியர்தான் விருந்தாளியாகி விடுகிறார்.

சதா பத்திரிகையைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கும் அவரை நான்தான் காப்பி சாப்பிடக் கூப்பிட்டனுப்ப வேண்டும் ; சாப்பாட்டுக்கும் ஆள் அனுப்ப வேண்டும்.

([illegible] 15-12-68 இதழிலிருந்து)

இந்தக் கடிதம், டி.கே.சி.க்கும் கல்கிக்கும் இடையே நிலவிய அன்பு மிக்க உறவாடலுக்கு மற்றும் ஒரு சான்றாகும்.

டி. கே.சி.யுடன், நெருங்கிப் பழகியவர்களில் சிலர், கல்கியைப் பற்றி, ''அவர் முன்போல் இல்லை'', ''மதித்துப் பேசுவதில்லை'' என்றெல்லாம் அவரிடம் குறை கூறுவதுண்டு. அவ்விதக் கூற்றுக்களை ரசிகமணி மறுதலித்து, தம் அனுபவத்தைக் கொண்டே சமாதானம் சொல்லுவார். அது என்ன என்பதை, அவருடைய சொற்களிலேயே பரேதனுக்கு அவர் எழுதிய கடிதங்களிலிருந்து தொகுத்துப் பார்க்கலாம்:

கல்கியின் அரசியல் கட்டுரைகளையும் செய்திக் குறிப்புக்களையும் சிவகாமியின் சபதத்தையும் ஒவ்வோர் இதழிலும் படித்து அனுபவித்து வந்தேன். அனுபவத்தை எல்லாம் எழுதவா முடிகிறது ? இல்லை ! ஏதோ சாப்பாட்டுக்கு முன்னே இலையில் சட்னி பாயசம் படைத்தது போலத்தான் என் பாராட்டெல்லாம்.

கல்கியின் குண அம்சம் ஒன்றை உள்ளபடி புலப்படுத்தி விளக்குவதற்காகவே இவ்வளவும் சொன்னது. இதைக் கொண்டு, அவர் கலகலப்பாகப் பேசிப் பழகமாட்டாரோ என்று யாரும் நினைக்க வேண்டாம். பொதுவாக மாலை வேளைகளில் அவர் மலர்ச்சியாகவே இருப்பார். மேடை ஏறிப் பேசுவதற்காகவோ, அரங்குக் கலைகளை ரசிப்பதற்காகவோ வெளியே போகாத மாலை வேளைகளில் வீட்டுக்கு வருவோரை இன்முகத்துடன் வரவேற்று இனிதாகவே உரையாடுவார்.

உரையாடுவதற்கென்றே நண்பர்களின் வீடு தேடிக் கல்கி போவதும் உண்டு. ஒரு சமயம், குடும்ப நண்பர்களான வசுமதி — ராமசுவாமி தம்பதியரின் இல்லத்துக்குச் சென்றிருந்தபோது, தான்ஸேன் கதையை அவர் சொன்னாராம். தான்ஸேனை எப்படி அக்பர் பாதுஷா தனிமையின் இனிய சூழலில் கலை யோகம் செய்யவிட்டாரோ, அப்படியே எழுத்தாளர்களை ரசிகர்கள் விட வேண்டும் என்றாராம். ஆயினும், உரையாடலினால் மனத் தெளிவும் கற்பனைச்

செறிவும் உண்டாகுமாதலால், வேண்டும் போது நண்பர்களைத் தேடி எழுத்தாளர்கள் செல்லலாம் என்று சொன்னாராம். உரையாடல் என்றால் பேச்சுப் பரிமாற்றம் என்பதற்கேற்ப, தாமும் பேசிப் பிறரையும் பேச விட்டுக் கேட்பார் என்று, அத்தம்பதியர் சொல்கிறார்கள். புதிதாக ஏதேனும் சொன்னால், அதை இன்னொரு தரம் சொல்லச் சொல்லிக் கேட்பாராம். தாம் எழுதியதைப் பற்றிய விமரிசனத்தை உவந்து கேட்பார்; எழுதப் போவதைப் பற்றிய எண்ணங்களை உற்சாகத்துடன் தெரிவிப்பார்.

வாழ்க்கையிலும் எழுத்திலும் விதவிதப் பான்மையைக் கொண்டிருந்த கல்கி, இலக்கியம், இசை, நாடகம், அரசியல், சமயம் முதலிய வெவ்வேறு துறைகளில், விதம் விதமான நண்பர்களையும் கொண்டிருந்தார். அவர்களில், அரசியலிலும் இலக்கியத்திலும் ஒருங்கே ஈடுபட்டவரான ம. பொ. சிவஞானம் அவருக்கு மிகவும் வேண்டிய தோழராய் இருந்தார். அவரை ''வீரத் தமிழர்'' எனக் கொண்டாடிப் புகழ் மொழி மாலைகளைச் சூட்டிக்கொண்டேயிருந்தார். அவற்றில் ஒன்று, ராஜாஜியை ஆதரித்ததற்காக — நாம் ஏற்கனவே அறிந்தபடி — அவர் தாக்குண்டு விழுப்புண் அடைந்தபோது சூட்டியது :

திரு ம.பொ. சிவஞானம் பாட்டாளி வர்க்கத்தில் பிறந்து, பாட்டாளியாக இருந்து பாடுபட்டு வாழ்ந்தவர். தமது அறிவினாலும் ஆற்றலினாலும் ஒழுக்கத்தினாலும் உழைப்பினாலும் அரசியல் தலைவராக உயர்ந்தவர். தெய்வத் தமிழ் மொழியைத் தமது சொந்த முயற்சியினால் கற்று வளர்ந்து, பழந் தமிழ் இலக்கியங்களை ஆராய்ச்சி அறிவுடன் கற்றுத் தேர்ந்து, புலவர்களும் பாராட்டக்கூடிய தமிழ்ப் புலமை பெற்றவர். பிரசங்க மேடைகளில் இணையற்ற வன்மையுடன் தமிழைக் கையாளும் திறமை பெற்றவர். அரசியல் வாழ்க்கையில் புகுந்தது முதல் தமக்கென எதையும் வேண்டாது பொதுமக்களுக்கே ஓயாது உழைத்துப் பாடுபட்டு வருகிறவர். உழைப்பினாலும் ஊக்கத்தினாலும் தொண்டினாலும் தியாகத்தினாலும் உயர்ந்த ம.பொ.சி.யைப் பற்றித் தமிழ் நாட்டில் தமிழராய்ப் பிறந்த ஒவ்வொருவரும் பெருமை கொண்டு தோள்கள் பூரிக்க வேண்டும்.

(கல்கி இதழ் 20-9-53)

அன்பைப் போலவே அன்புப் பாராட்டுரையும் அவர்களிடையே இருவழி இயக்கமாய் இருந்தது. ம.பொ.சி.யின் ''செங்கோல்'' இதழ்கள் பலவற்றில், கல்கியைப் பற்றிய நினைவுக் குறிப்புக்களைக் காணலாம். ஒரு குறிப்பில், ''பரதனும் குகனும் நண்பர்களானதற்கு ராமன் காரணமாக இருந்தது போல, நானும் கல்கியும் நண்பர்களானதற்குத் தலைவர் ராஜாஜி காரணமாய் இருந்தார்'' என்று எழுதியிருக்கிறது.

பேச்சாலும் எழுத்தாலும் செயலாலும், ராஜாஜிக்குப் பக்கபலமாய் நின்றதன் மூலம் அவர்கள் நேயர்களாய் இணைந்தார்கள். தாம் போற்றிய ராஜாஜியை ம. பொ. சி. போற்றியதால்தான் அவரிடம் கல்கி தனி மதிப்புக் கொண்டார். அந்த மதிப்பினால் வளர்ந்து உறுதிப்பட்ட நட்பு, இடையிடையே ராஜாஜியுடன் ம. பொ.சி. வேற்றுமை கொண்ட போதும் நலிந்து போகாமல் நிலைத்தது.

சித்தூர் ஜில்லாவின் ஆறு தமிழ்த் தாலூக்காக்களைத் தமிழ் நாட்டுடன் சேர்க்க வேண்டும் என்பதாக, ம.பொ. சி.யின் தமிழரசுக் கழகம் விடுத்த கோரிக்கையைக் கல்கி ஆதரித்துத் தலையங்கங்கள் எழுதினார். அந்த ஆதரவைக் கண்டு ம. பொ. சி. வெகுவாக உற்சாகம் கொண்டார். பின்னர் அதை நினைவுகூர்ந்தும் மெச்சி எழுதினார் :

வடக்கெல்லைப் போராட்ட காலத்தில் கல்கியாரின் பக்திக்குரிய ராஜாஜிதான் முதல் அமைச்சராய் இருந்தார். பொறுப்புணர்ச்சி காரணமாய் அந்தப் போராட்டத்தை ராஜாஜி விரும்பவில்லை. அப்படியிருந்தும், வடக்கு எல்லையில் நடைபெற்ற சட்ட மறுப்புப் போராட்டத்துக்கு வெளிப்படையாக ஆதரவு காட்டி எழுதினார் 'கல்கி' கிருஷ்ணமூர்த்தி. என்னிடம் அவர் வைத்திருந்த அன்பும், வடக்கெல்லையை மீட்டுத் தர வேண்டும் என்பதில் அவருக்கிருந்த ஆர்வமுந்தான் இதற்குக் காரணங்களாகும்.

இந்த வாக்கியங்கள் வெளியான 12—12—54ம் தேதிய ''செங்கோல்'' தலையங்கத்தில், கல்கியின் பரோபகாரச் செயல்கள் பற்றியும் ம.பொ.சி. எழுதியிருக்கிறார் :

நண்பர் கல்கி, கஷ்டப்படுவோருக்கும், நஷ்டம் அடைந்தோருக்கும் நிவாரணம் தேடுவதில் தனி ஆர்வம் காட்டி வந்தார். அடுத்தவருக்குத் தெரியாமல் உதவி புரிவதில் அவரைப் போன்ற மற்றொருவரைக் காண்பது அரிது. ஏழைமையில் இன்னலுற்ற எழுத்

---



**காந்தி உணவு**

பாதாம் பருப்பை விடப் பச்சைப் பயிறில் உணவு சத்து அதிகம். அதே போல நிலக்கடலை, பாலையும் முட்டையையும் விட சத்து வாய்ந்தது.

ஹிந்துஸ்தான் டைம்ஸ் — பாலி

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி



அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் கலந்து கொள்ளும் ஆர்வம் ஆண்டுக்கு ஆண்டு பெருகி வருகிறது. இந்த வருஷம் முன்னெப்போதையும்விட அதிக அளவில் இளம் எழுத்தாளர்களும் அறிமுக எழுத்தாளர்களும் அனுபவ எழுத்தாளர்களும் கலந்து கொண்டு சிறப்பிப்பார்கள் என நம்புகிறோம்.

**சரித்திர அல்லது சமுதாய நோக்குடன் விஞ்ஞான அல்லது புதுமைக் கருத்துக்களும் கதைகளில் இடம் பெறட்டும்; பழைய பாணியுடன் நவயுக நடையும் துள்ளி வரட்டும்.**

| | | |
|---|---|---|
| முதல் பரிசு | ... ரூ. | 1,000 |
| இரண்டாம் பரிசு | ... ரூ. | 500 |
| மூன்றும் பரிசு இரு கதைகளுக்கு தலா ரூ. 250 வீதம் | ... ரூ. | 500 |

பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதைக்கும் ரூ. 100 சன்மானம் வழங்குகிறோம்.

**முடிவு தேதி : 30 - 6 - 76**

சிறுகதைகள் கல்கியில் நாலு அல்லது ஐந்து பக்கங்களுக்கு மேற்படாமல் அமைவது நலம். பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய தபால் தலைகள் ஒட்டப்பெற்ற சுயவிலாசமிட்ட உறை அனுப்புதல் வேண்டும். போட்டியில் பங்கு பெறுவோர் தங்களைப் பற்றிய சிறு குறிப்பும் புகைப்படமும் அனுப்பலாம். கடிதப் போக்குவரத்துக் கிடையாது. ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

**ஆசிரியர், கல்கி, சென்னை - 600 031**

××××××××××××××××××××××××××××××××××××××××

தாளர்களுக்கும், வறுமையில் வருந்திய கவிஞர்களுக்கும் நிதி திரட்டிக் கொடுத்து அவர்களுடைய கஷ்டங்களைக் குறைத்திருக்கிறார். என்னை வறுமையிலிருந்து மீட்டு எனது வாழ்க்கையை வளமாக்குவதற்கு இரண்டு முறை முயன்றார். அந்த இரண்டு முறையும், தாமே எனது இல்லத்துக்கு வந்து தமது எண்ணத்தைத் தெரிவித்து எனது இசைவைக் கோரினார். நான் அவருடைய கருத்துக்கு இசைய மறுத்ததால் கவலையோடு வீடு திரும்பினார்....

அவர் பிறருக்கு உதவி புரிவதற்கு நட்பு காரணமாக இருந்ததேயன்றிச் சாதி உணர்ச்சி காரணமாக இருந்ததில்லை. அவரிடம் நெருங்கிப் பழகிய ஒவ்வொருவருடைய நெஞ்சம் இந்த உண்மையை அறியும்.

தமக்கு நிதி திரட்டக் கல்கி முயன்றதை, ''எனது போராட்டம்'' என்ற தமது சுய வரலாற்றிலும் ம.பொ.சி. குறிப்பிட்டுள்ளார். ஒரு முயற்சியில் இருபத்தையாயிரம் ரூபாய் திரட்டத் திட்டமிட்டாராம். தாம் அனுமதி தர மறுக்கவே, ''மிகுந்த வருத்தத்துடன் தமது முயற்சியைக் கைவிட்டார் கல்கியார்'' என்கிறார் அதில்.

பரிவு காரணமாய்த் தமக்கு நிதி திரட்டுவதைத்தான் ம.பொ.சி. அனுமதிக்கவில்லை. அப்படி அல்லாமல், தொழில் முதலீட்டு வகைக்காக ஒரு சமயம் கல்கி புரிந்த உதவியை அவர் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டார். தாம் ''கண்ணகி அச்சகம்'' நிறுவியதைத் தமது வரலாற்றில் அவர் குறிப்பிடுகையில், அதில் அமைத்த அச்சு யந்திரத்தை, நண்பர்கள் சிலரிடமிருந்து கல்கி திரட்டிக் கொடுத்த பணத்தினால் வாங்கியதாக எழுதியுள்ளார்.

இவை போல், கல்கியின் நேசச் செயல்கள், சைகைகள் பற்றித் தமது பத்திரிகையிலும் வரலாற்றிலும் பல குறிப்புக்கள் எழுதியுள்ள ம.பொ.சி., அவரைக் குறை கூறுவதாய் மருந்துக்கு ஒன்றுகூட எழுதவில்லை. அப்படி எழுதாமைக்கு, ''நன்றல்லது அன்றே மறப்பது நன்று'' என்பதல்ல காரணம். ஏனெனில், வேறு சிலரின் குற்றம் குறைகளைத் தயக்கமின்றிச் சுட்டிக் காட்டியே இருக்கிறார்.

ம.பொ.சி.யின் அனுபவத்தில் கல்கியின் நட்பு மாசிலா மணியாய் இருந்திருக்கிறது. (தொடரும்)

மேக் அப் உங்கள் முகத்தின்
குறைகளை மறைக்கலாம்.





# இயேசுநாதர் ஜூடாஸ் ஆனார்!

அநிதா பதம்

அவன் தன் காலத்தில் மாபெரும் ஓவியன். நூற்றுக்கணக்கான ஓவியங்கள் தீட்டியிருந்தான். பல ஆண்டுகள் இடைவிடாது கலைச் சாதனை புரிந்ததன் பயனாக அவன் கைவண்ணம் கூடியிருந்தது. அவன் ஜடப்பொருள்களைத் தீட்டினாலும் உயிர்ப்பும் உணர்வுத் துடிப்பும் மிளிர்ந்தன. அவன் எத்தனையோ பேர்களுடைய முகங்களை வரைந்திருந்தான். அந்த முகங்கள் அகத்தின் அழகைப் பளிங்கென எடுத்துக்காட்டுவதாக அமைந்தன. தன் கலை வளர்ந்து செம்மையுற்றுவிட்டது என்று அவன் நம்பினான். அந்த நம்பிக்கையில் இயேசுநாதரின் வாழ்க்கையை ஓவியமாகத் தீட்ட வேண்டும் என்று ஆசை கொண்டான். அந்த ஆசை வலுத்தது. அதுவே அவன் வாழ்க்கையின் பெரும் குறிக்கோளாகவும் பரிணமித்தது.

ஒவ்வொரு நாட்டிலும் எத்தனையோ ஓவியர்கள் இயேசுநாதரின் ஓவியத்தைத் தீட்டியுள்ளார்கள். ஒருவர் தீட்டிய சித்திரத்தோடு இன்னொருவர் தீட்டிய சித்திரம் ஒட்டி வந்ததில்லை. ஒருவருடைய கிறிஸ்து ஆங்கிலேயராகத் தோன்றினார். இன்னொருவருடைய கிறிஸ்து ஸ்பானியராகத் தோன்றினார். அவரவர் மனோதர்மத்துக்கேற்ப இத்தாலிய, போர்த்துகீசிய, ருஷ்யச் சாயை என்று பல சாயல்கள் தோன்றின. அந்தந்த நாட்டு ஓவியனும் தன் நாட்டுக் குடிமகனைப்போலவே சித்திரம் தீட்டியிருந்தான். ஆனால் அவன் கிறிஸ்துவை ஒரு குறிப்பிட்ட நாட்டைச் சேர்ந்தவராகச் சித்திரம் தீட்டிப் பார்க்க விரும்பவில்லை. தான் தீட்ட நினைத்த சித்திரத்தில் எந்நாட்டுக்கும் பொதுவான மானிடப் பண்பு மிளிர வேண்டும் என்றே அவன் நினைத்தான். அவன் பல முறை அந்த முகத்தைத் தன் கற்பனையில் வடித்துப் பார்த்தான். கடைசியில் அந்தக் கற்பனையில் மிதந்து அவருடைய வாழ்க்கைக் கதையை ஓவியமாக தீட்டுவது என்ற முடிவுக்கு வந்து அதைச் செயலாக்க முனைந்தான். தான் கற்பனையில் கண்ட முகத்தைக் கொண்ட எவனாவது தனக்கு 'மாடலா'க் கிடைப்பானா என்று தேடலானான். எதற்கும் ஓர் ஆதாரம் வேண்டும், ஆதாரமின்றிக் கற்பனையுமே வடிவம் பெற முடியாது என்பதை அறிந்த அவன், வாழும் மனிதர்களிடையே தன் கற்பனை முகத்தைத் தேடலானான். கருணை நிறைந்த முகம்; கபடு சூதற்ற முகம்; துயரத் தீயில் புடம்போட்டுப் பொன்னை நிகர்த்த முகம்; அமைதியும் அடக்கமும் அலர்ந்த முகம்! மனித மனத்தில் எழும் எந்த விகாரங்களுமே அந்த முகத்தில் படர்ந்து படிந்துவிடக் கூடாது. அந்த முகத்தைப் பார்த்ததும் மனிதனுடைய மனத்திலே நல்லெண்ணம் மட்டுமே தலை தூக்க வேண்டும். நல்லவனாக வேண்டும் என்ற எண்ணம் மட்டுமே உருப்பெற வேண்டும். அந்த முகம் எல்லாக் குணங்களும் நிறைந்திருந்தாலும் சாதாரணமாகக் காட்சி தர வேண்டும்; அதே நேரத்தில் உலகிலேயே இல்லாததாகவும் தோற்றம் தர வேண்டும் என்றெல்லாம் கோட்டை கட்டினான்.

அத்தகைய முகத்தைத் தேடி அவன் நாடு நகரங்களில் எல்லாம் சுற்றினான். மாதா கோயில்கள், கடைகண்ணிகள் என்று எங்கெல்லாமோ போனான். உயர்ந்தோர் வாழும் பகுதிகளுக்கும் போனான். தாழ்ந்தோர் வாழும் சேரிகளுக்கும் போனான். ஆயிரக்கணக்கான முகங்கள் அவன் பார்வையில் வந்து போயின. ஒன்றாவது அவன் மனத்தில் தங்கவில்லை; அவன் கண்ட கற்பனை முகம் தென்படவே இல்லை. இயேசுநாதரின் முகத்தை வடித்தெடுக்க அவன் கற்பனையில் உதித்த முகம் வெளி உலகில் கிட்டவே கிட்டாதோ? அவன் தேடி அலைந்து சலித்துப் போனான். அவன் நம்பிக்கையெல்லாம் தவிடுபொடியாகி அந்த இடத்தை அவநம்பிக்கை பிடித்துக் கொண்டது. இத்தனை பெரிய உலகில் இயேசுநாதரின் உருவத்தைச் சித்திரித்துக் காட்டக்கூடிய ஒரு முகம்கூட இராதா? ஒரு மனிதன்கூடக் கிடைக்கமாட்டானா? ஒரு பச்சிளங் குழந்தையின் முகத்தை 'மாடலா'க் கொள்ளலாம் என்றாலோ அது பால் மணம் மாறாததாகத் தான் தோற்றம் தருகிறது. அதே குழந்தை பெரிதாகப் பெரிதாக அதன் முகத்தில் எத்தனை விகாரங்கள் படிந்து விடுகின்றன! முகமே எப்படி அடியோடு தலை மாறிவிடுகிறது! ஆசை, பேராசை, பொறாமை, பகைமை, இன்ப நாட்டம், கோபம் — தாபம், பொய்ம்மை, ஆணவம் அகங்காரம் என்று எத்தனையோ உணர்வுகள் படிந்து அந்த முகத்தைப் படுகோரமாக்கி விடுகின்றன! அந்த விகாரமான முகங்களைப் பார்க்கும் பொழுது எத்தனை வியப்பு ஏற்படுகிறது! இந்த உலகத்தில் இருந்து கொண்டே அவை எப்படியெல்லாம் நரகவேதனைப்பட்டிருக்கின்றன என்றும் தோன்றுகிறது!

அவன் முகத்தைத் தேடுவதிலேயே பல காலம் ஓடிவிட்டது.

ஒரு நாள் ஓவியன் தன் வேலை—வெட்டிகளை முடித்துக் கொண்டு உலாவப் புறப்பட்டான். நகரத்திலிருந்து வெகுதூரம் சென்றான். நாற்புறமும் வயல்களும், காடு, கழனிகளும் கண்களுக்கு விருந்து அளித்து இயற்கையின் அழகைப் பறைசாற்றின. நகர்ப்புறத்து அமளி துமளிகளையும் அலுவல்களையும் கண்டு

மனம் அலுத்துச் சலிக்குமானால், இந்தப் பகுதிக்கு வருவது அவன் வழக்கம். அங்கே அவனுக்கு அமைதி கிட்டும். இயற்கை தன் மொழியில் உரையாடி அவனை மகிழ்விக்கும். அவன் இயற்கையின் ரகசியங்களை அறிய முயல்வான். மனத்தை இப்படி லயிக்க விடுவதில் அவனுக்கு இன்பம் கிட்டினாற்போல் தோன்றும். அன்றும் அவன் அத்தகைய இன்பத்தை அநுபவித்துக் கொண்டு அமர்ந்திருந்தான். எங்கிருந்தோ இலேசாக இனிய குழலோசை காற்றில் மிதந்து வந்தது. அவன் ஓசை வந்த திக்கை நோக்கி நடந்தான். புல்லாங்குழல் ஒலி அவனை மந்திரமென மயக்கி இழுத்தது. சிறிது தொலைவில் ஒரு மரத்தின் கீழே மாடு மேய்க்கும் இளைஞன் ஒருவன் பாதி படுத்தாற்போல் அமர்ந்து புல்லாங்குழல் வாசித்துக் கொண்டிருந்தான். ஓவியன் அவனை நெருங்கி நின்றான். மாடு மேய்ப்பவனின் கவனம் கலைந்தது. வியப்புடன் ஓவியனை நோக்கினான்.

அவனைக் காட்டிலும் அதிக வியப்போடு, ஓவியன் அவனை நோக்கினான். தன் பார்வையை ஊன்றி அவன் முகத்தையே வெகு நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். எந்த முகத்தை அவன் இத்தனை நாட்களும் தேடினானோ, அது அருகிலேயே இருப்பதைக் காணவே அவன் மெய்சிலிர்த்துப் போனான்.

பேச்சுக் கொடுத்துப் பார்த்தபொழுது, அந்த இளைஞன் பக்கத்துக் கிராமத்தில் வசிப்பவன் என்றும் மாடுகள் மேய்த்து வயிறு கழுவுகிறவன் என்றும் தெரிய வந்தது. அரை வயிற்றுக்குக் கஞ்சி கிடைத்தாலும் அவன் மகிழ்ச்சியாக இருக்கிறான் என்றும் புரிந்தது.

''நான் உன்னை என் எதிரே உட்கார வைத்து ஓவியம் தீட்ட விரும்புகிறேன். என் ஓவியத்துக்கு மாதிரியாக நீ உட்கார்ந்தால் உனக்கு வேண்டிய பணம் தருவேன். நீ பலமாதங்கள் என்னோடு உட்கார வேண்டிவரும். அன்றாடம் நான் உனக்குப் பணம் தருவேன். குறுகிய காலத்துக்குள் நீ ஏராளமான பொருள் ஈட்டி விடுவாய்! உன் வாழ்வேகூட அடியோடுமுடி மாறிப்போகும்!'' என்று அவனிடம் ஓவியன் கூறினான்.



தமிழாக்கம்:
ரா. வீழிநாதன்

மாடு மேய்ப்பவன் மகிழ்ச்சியோடு சம்மதம் தெரிவித்தான். அவன் அதிர்ஷ்டம் மாறுகிறாற் போலவே தோன்றியது.

அடுத்த நாள் முதற்கொண்டு ஓவியன் அவனை மாதிரிப் பொருளாக உட்கார வைத்து இயேசுநாதரைப் பல உருவங்களில் ஓவியமாகத் தீட்டிக் கொண்டான். எத்தனையோ வரைகோடுகளும் வரைந்து கொண்டான். நாளுக்கு நாள் அவன் வேலை வளர்ச்சி கண்டது. அதில் அவன் மகிழ்ச்சி கண்டான். பழகிய கை, பற்றுக்குறைக்கு நேர்த்தியான மாடல்! சிறந்த ஓவியனுக்கு வேறு என்ன வேண்டும்?

நாட்கள் ஓடின. மாடு மேய்ப்பவனின் வாழ்க்கையிலும் மாற்றம் தெரிந்தது. அவன் வேண்டிய பொருள் ஈட்டிவிட்டான். அந்தப் பொருளைக் கொண்டு அவன் பற்பல கனவுகள் காணலானான். கடைசியில் ஓவியன் தன் பூர்வாங்க வேலைகளை முடித்துக் கொண்டு அவனுக்கு விடை கொடுத்தான். விடை கொடுத்த பொழுது வேண்டிய பரிசும் வழங்கினான்.

மாடு மேய்ப்பவன் மகிழ்ச்சியோடு விடை பெற்றான்.

ஓவியன் அந்தக் கோட்டுப் படங்களைக் கொண்டு வண்ண ஓவியங்கள் சமைக்கலானான். அந்த ஓவியங்களை ஒரு மாதா கோயிலின் நாற்புறச் சுவர்களிலும் கூரையிலும் மாட்டுவதாகத் தீர்மானித்திருந்தான்.

இந்த வேலையில் பொழுது போவதே தெரியாமல் பல ஆண்டுகள் ஓடிவிட்டன. இதற்கிடையில் இயேசுநாதரின் வாழ்க்கையோடு சம்பந்தப்பட்ட நபர்களுக்காக 'மாடல்கள்' தேடுவதில் ஓவியனுக்கு அதிகச் சிரமம் ஏற்படவில்லை. ஆனால் இயேசுநாதரின் கடைசி நாட்களோடு சம்பந்தப்பட்ட ஜூடாஸின் படம் வரையும் பொழுது மீண்டும் மாடல் விஷயத்தில் அவனுக்குச் சிரமம் ஏற்பட்டது. ஜூடாஸுக்கு ஏற்ற மாடல் இலேசில் கிடைப்பதாக இல்லை. ஜூடாஸைப் போல அவன் நீசனாக, கயவனாக, மோசக்காரனாக இருக்க வேண்டுமே! அதற்கு அவன் முகம் எவ்வளவு விகாரமாயிருக்க வேண்டும்? அந்த முகத்தைக் கண்டு பார்ப்பவர்கள் பயப்பட வேண்டும் என்றால், அவன் முகம் எத்தனை கோரமாயிருக்க வேண்டும்? ஜூடாஸ் இயேசு நாதரை அண்டிக் கெடுத்தவனாயிற்றே! எத்தனை ஈவு இரக்கமற்றவனாக இருந்தால் அவன் அப்படிச் செய்திருப்பான்? அவனைப் போன்றவன் அல்லவா மாடலுக்குத் தேவை!' அந்த கைட கயவனை ஓவியன் தேடினான்; தேடினான்; அப்படித் தேடினான். ஆனால் யாருமே கிடைக்கவில்லை. ஜூடாஸுக்கு ஏற்ற மாடல் கிடைக்கவில்லை என்றால், இயேசு

## பழ மனிதன்



பழங்கள் மட்டுமே படத்தில் உள்ளன.

புகைப்படம்: கே. வி. கிருஷ்ணன்

xxxxxxxxxxxxxxxxxxxxxxxx

நாதரின் வாழ்க்கை ஓவியம் அரைகுறையாகி விடுமே என்ற கவலை அவனைப் பற்றிக் கொண்டது. அவன் சிறைச்சாலைகளுக்குச் சென்று திருடர்கள், கொள்ளைக்காரர்கள், கொலைகாரர்கள் என்று பலரைப் பார்த்தான். குடியர்களையும் குண்டர்களையும் துருவித் துருவித் தேடினான். இழி செயல் செய்பவர்கள் பலரையும் எடை போட்டுப் பார்த்தான். ஆனால் எந்த முகமும் அவனுடைய கற்பனை முகத்துக்குக் கிட்டக்கூட வரவில்லை.

இப்படித் தேடித் தவித்தவாறு அவன் ஒரு சாராயக் கடை வழியே போய்க் கொண்டிருந்தான். திடீரென்று ஒரு பயங்கர முகம் அவன் கண்களிலே பட்டது. குடிபோதையில் மயங்கியிருந்த அவன், ஓவியனை நெருங்கிப் பிச்சைக்காரர்களைப் போலக் கையை நீட்டினான். ஓவியன் தன் சட்டைப் பையில் கையை விட்டுக் காசு எடுத்துப் போடப் போன பொழுதுதான் அவன் முகத்தைச் சரியாகக் கவனித்தான். ஜூடாஸின் படம் வரைவதற்கு அவன்தான் சரியான மாடல் என்று முடிவுக்கு வர அவனுக்கு நேரம் பிடிக்கவில்லை. அவனது முகத்தில் அவன் எதிர்பார்த்த அத்தனை விகாரங்களும் தீமைகளும் தாண்டவமாடிக் கொண்டிருந்தன. அவனைப் பார்க்கவே குமட்டிக் கொண்டு வந்தது. ஓவியன் அவனுக்குக் காசு கொடுத்தான். ஹோட்டலுக்கு அழைத்துச் சென்று வயிறு நிறைய உணவு அளித்தான். இன்னும் அதிகக் காசு தருவதாக ஆசை காட்டி அவனைத் தன்னோடு வருமாறு அழைத்தான்.

அவனும் சம்மதித்து அவனோடு சென்றான்.

ஸ்டுடியோவுக்குச் சென்று ஓவியன் அவனை எதிரே உட்கார வைத்து ஓவியம் தீட்டுவதில் முனைந்தான். அவன் முகத்தைக் கொண்டு ஜூடாஸின் முகத்தைத் தத்ரூபமாக வடித்துவிடுவது என்று முழுமூச்சோடு இறங்கினான். படம் வரையும் பொழுது, அவனை நன்றிக் கவனிக்க நேர்ந்தது. அப்பொழுதெல்லாம் ஓவியனின் உள்ளத்தைப் பிசைந்தெடுத்தது. அதோடு அவன் முகத்தின் பயங்கரமும் பன்மடங்கு பெருகிவிட்டாற் போன்று தோன்றியது. அவனுக்குக் கையும் ஓடவில்லை; காலும் ஓடவில்லை. அவனை 'மாடலா'கக் கொண்டு ஜூடாஸைச் சித்திரிக்க முடியும் என்றே தோன்றவில்லை. அவன் கவனம் நிலைக்கவில்லை; எண்ணம் ஒருமுகப்படவில்லை. மன முனைப்பு அறுந்து அறுந்து போயிற்று.

அவன் அந்தப் பிச்சைக்காரனின் முகத்தைக் கண் கொட்டாமல் பார்க்கலானான். பிச்சைக்காரன் தன் கண்களைச் செயற்படாமல் அடித்துவிட்டதாகத் தோன்றியது. அவன் ஒரு முறை தலையைச் சிலிர்த்துக் கொண்டான். பயமெல்லாம் போனாற்போல் தோன்றியது. அவன் மீது அவனுக்கு இரக்கம் பிறந்தது. அந்த இரக்க மிகுதியில், ''உன் நிலை இப்படி ஆனதுக்குக் காரணம் என்ன?'' என்று அவனால் கேட்காமல் இருக்க முடியவில்லை.

அந்த மனிதனின் முகத்தில் இலேசான கேலிச் சிரிப்பு விளையாடியது. ''எல்லாம் உங்கள் தயவுதான் !'' என்றான்.

'' என் தயவா ?''

''ஆமாம்!'' என்றவன், ''திடுதிப்பென்று ஏராளமான ரூபாய்கள் கிடைக்கவே, என் வாழ்க்கையே தடம் புரண்டுவிட்டது. நீங்கள் வழங்கிய காசைக் கொண்டு பல தீய பழக்கங்களை விலைக்கு வாங்கிக் கொண்டேன். அதன் பயனே நான் இன்று இருக்கும் நிலைக்குக் காரணம் !'' என்று முடித்தான்.

''நான் கொடுத்த காசா ? என்ன பிதற்றுகிறாய்?'' அவன் கூறியது விளங்காமற் போகவே ஓவியன் அவனைக் கடிந்து கொண்டான்.

''ஆம், நீங்கள் கொடுத்த காசுதான் ! உங்களுக்கு மறந்து போய்விட்டாற்போல் இருக்கிறது. சில ஆண்டுகளுக்கு முன்பு நான் இங்கு இது மாதிரியே வந்தேன். என்னைப் பார்த்து நீங்கள் இயேசுநாதரின் படத்தை வரைந்தீர்கள் !'' என்றான் அவன்.

ஓவியன் ஓவியமாகிச் சற்று நேரம் அவனையே பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு விசும்பி விசும்பி அழ ஆரம்பித்தான். ஏசுநாதரை நிகர்த்த ஒருவன் காலப் போக்கில் ஜூடாஸானதற்குத் தான் ஒரு கருவியாகி விட்டதை நினைத்து மனம் புழுங்கித் தவித்தான்.

## நமது நாகரிகத்தின் தொன்மை

கௌதம புத்தர் காலம் இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் என்று சரித்திர ஆசிரியர்கள் கூறுகிறார்கள். அவருடைய வளர்ப்பு, சூழ்நிலை, அவருடைய துறவு, போதனை முதலிய விஷயங்களையும் அவருக்குப் பின் வந்த அரசர்களின் செயல்களையும் கவனித்தால் அந்தக் காலத்திலும் அதற்கு முன்பாகவும் இந்த நாட்டில் எத்தகைய அரசாங்கம் நடைபெற்றது என்று தெரிந்து கொள்ளலாம். நாகரிகம், கலைகள், அரசாங்கம் முதலியவை எல்லாம் எந்த நாட்டிலும் ஒரே நாளில் நிலைத்துவிட முடியாது. மக்கள் பல்லாண்டுகளாக உழைத்தே அவைகளை உண்டாக்கி வளர்த்து உன்னத நிலையை உடையதாக ஆக்கியிருப்பார்கள். ஆகவே புத்தரையும் அவரது ஹிதோபதேசத்தையும் உண்டாக்க நம்முடைய நாடு எத்தனை ஆண்டுகள் உழைத்திருக்க வேண்டும் என்று எண்ணிப் பாருங்கள்.

—இந்திய தேச சரித்திரம் என்ற கட்டுரையில்

# பாலம் படுத்திய பாடு

## சவாலைச் சந்தித்தேன்!

காரியாலயத்தில் உள்ள என் சக ஊழியர்களையும் நண்பர்களையும் சேர்த்துக் கொண்டு பேருந்தை வாடகைக்கு அமர்த்திச் சுற்றுலாவுக்கு ஏற்பாடு செய்வதில் எனக்கு ஆர்வம் அதிகம் உண்டு.

ஒரு முறை ஆந்திர மாநிலத்தில் பிரயாணம் செய்து கொண்டிருந்தோம். இரவு சுமார் பத்து மணி இருக்கும். சாலையில் எங்களுக்கு முன்னே ஒரு சிறிய ரயில் பாலம். சாலை, பாலத்துக்குக் கீழே குறுக்காகப் போகிறது. எங்கள் பஸ் டிரைவர் கரீம், பஸ்ஸை மெதுவாகப் பாலத்தின் அடிவரை ஓட்டிச் சென்றார். பஸ்ஸின் முகப்பு பாலத்தின் மேல் விளிம்பை இடித்து நின்றது. எங்கள் பஸ், அந்தப் பாலம் போக்குவரத்துக்கு அனுமதித்த உயரத்தைவிட நாலு அங்குலம்கூட இருந்தது! இப்போது என்ன செய்வது?

நண்பர்களிடமிருந்து யோசனைகள் சரமாரியாக வந்தன. ஓர் அன்பர் வேகமாக, பஸ், டாப்பைக் கழற்றி மறு பக்கம் போய் மாட்டிக் கொள்ளலாம் என்றார். அது என்ன மாப்பிள்ளை அழைப்பு டூரர் காரா?

மற்றொருவர், டயர்களிலுள்ள காற்றை இறக்கிவிட்டு உயரத்தைக் குறைத்துப் பஸ்ஸை மறு பக்கம் தள்ளி மீண்டும் காற்று அடிக்கலாம் என்றார். 'அப்படிக் காற்றை இறக்கினாலும் மொத்தம் ஒன்றரை அங்குலம் உயரம்தான் குறையும். மீதி இரண்டரை அங்குலத்துக்கு என்ன செய்வது?

வேகம் நிறைந்த நான்கு நண்பர்கள் கையில் கிடைத்த இரும்புச் சாமான்களை எடுத்துக் கொண்டு பாலத்தின் கீழ் இருந்த சாலைப் பகுதியைப் பள்ளமாக்க முயற்சி செய்தார்கள். ஹூஹூம்! கட்டிப்பைக் கற்களால் போடப்பட்ட இடம் அந்தச் சாலைப் பகுதி. அவர்கள் முயற்சிக்கு மசியவே இல்லை.

அந்த நேரத்தில் பாலத்தின் அடி வழியாக மறு பக்கத்திலிருந்து இரண்டு கிராமவாசிகள் மாட்டு வண்டியை ஓட்டிக்கொண்டு வந்தார்கள். அவர்கள் வழி சொன்னார்கள்.

அதாவது நாங்கள் வந்த வழியிலேயே பஸ்ஸைத் திருப்பிக் கொண்டு போனால், நான்காவது மைலிலிருந்து ஒரு மேடான பாதை வளைந்து செல்கிறது. அது ரயில் பாதையின் மட்டத்துக்குப் போய் மறு பக்கம் இறங்கிச் சுற்றி இந்தப் பாலத்துக்கு அப்பால் வரும். "அதை உபயோகியுங்கள். மழை நிறையப் பெய்திருக்கிறது. ஜாக்கிரதையாகப் போங்கள்" என்று சொல்லிவிட்டு அவர்கள் போய்விட்டார்கள்.

சேற்றில் அழுந்தாதிருக்க பஸ்ஸின் எடையைக் குறைக்கத் தீர்மானித்தோம். அவசரம் அவசரமாக முக்கால்வாசி சாமான்களை அங்கேயே இறக்கி வைத்தோம். முக்கால்வாசி நபர்களும் இறங்கி நின்றார்கள். மீதிப் பேருடன் மறு பக்கம் வர பஸ் பின்னோக்கிக் கிளம்பியது. அவசியம் ஏற்பட்டால் தள்ளுவதற்கு ஆட்கள் வேண்டாமா?

பஸ், சேறு சகதிகளில் சிக்கி எழுந்து ஒரு தினுசாக மறு பக்கம் வந்து நின்றபோது விடியற்காலை மணி நான்கு. எங்கள் ஆனந்தத்தை வர்ணிக்க முடியாது. மகாநந்திக்கு ஐந்து மணிக்குப் போய்ச் சேர்ந்தோம். அங்கே லிங்கத்திலிருந்து ஊற்றுப் பெருகிக் குளமாக நிற்கிறது. ஆனந்தமாக ஸ்நானம் செய்தோம். முதல் நாள் இரவு பட்டினி! அங்கேயுள்ள காண்டீன்மீது பகாசுரப் பசியுடன் படையெடுத்தோம். பாலம் எங்களுக்குச் சவால் என்றால் எங்கள் பசி காண்டீன்காரருக்குச் சவால். அவரும் சமாளித்தார்.

அப்புறம் பல தடவைகள், காஷ்மீர், கல்கத்தா என்று சுற்றுலா ஏற்பாடுகள் செய்து வெற்றிகரமாக முடித்தோம். ஆனாலும் பேணுகொண்டா — மகாநந்தி வழி அளித்த சவாலை மறக்க முடியாது.



திரு எஸ். சோமசுந்தரம்
கூறக் கேட்டு எழுதியவர்:
பட்டினத்தார்



# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பமினமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைந்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளதோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது; இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்—**

**தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

ஸ்ரீமதி மரகதம் சந்திரசேகர் அவர்களை எப்படியாவது பேட்டி கண்டுவிட வேண்டும் என்று ஆசைப்பட்டு அரசாங்க விருந்தினர் மாளிகையை நாளெல்லாம் முற்றுகையிட்டதுதான் மிச்சம். தலைவர்களும் தொண்டர்களும் மாறி மாறி அவர் அறைக்குள் சென்று திரும்பி வந்து கொண்டிருந்தார்கள். எனக்குப் பேட்டி கிடைக்கவில்லை. என்றாலும் விடா முயற்சியுடன் இரண்டாம் நாளும் படையெடுத்தேன். இம்முறை போர்த் தந்திரத்தை மாற்றிக் கொண்டேன். முற்றுகை நடத்துவதில்லை. கோட்டைக் கதவைத் தாக்கிவிடுவது என்று தீர்மானம்!

இன்றும் நேற்று அளவில் முக்கால்வாசிக் கூட்டம் காத்திருந்தது. அவரைச் சந்திக்க. சற்று நேரத்துக்கெல்லாம் போர்டிகோவில் சலசலப்புக் கேட்டது. கார்க் கதவைத் திறக்கும் சப்தம். ஆறும் நம்பர் அறை வாசலில் எல்லோரும் வழி விட்டு நின்றனர். என்னையே ஒரு மூப்பனாராகவோ, நெடுமாறனாகவோ கற்பனை செய்து கொண்டு, பேசாமல் அந்த அம்மையாரைப் பின்தொடர்ந்து அறைக்குள் போய்விட்டேன். எனக்குப் பின்னால் சில கட்சி ஊழியர்கள்!



எங்கேயோ ஒரு கிராம முன்சீப் வீட்டையோ, கர்ணத்தின் வீட்டையோ சோதனை இட்டதாக ஒரு காலைப் பத்திரிகையில் செய்தி பார்த்தேன். காங்கிரஸ் காரியதரிசிக்கு இத்தனை அதிகாரம் உண்டா என்று ஆச்சரியப்பட்டேன்...''

நான் முடிக்கவில்லை. விவகாரம் சூடு பிடித்து விட்டது. ''காலைப் பத்திரிகை என்று ஏன் நாசூக்காகச் சொல்கிறீர்கள்? முரசொலி என்று சொல்லுங்களேன்! அவர்கள்தான் அப்படிப் போடுவார்கள். நடந்தது இதுதான். அரக்கோணத்துக்குப் பக்கத்திலே ஒரு சின்ன கிராமம். அங்கே சில விவசாயக் குடும்பங்கள் அரசாங்கத்திடம் கடன்பட்டிருக்கின்றன. அந்தக் கடன் பாக்கிகளை வசூல் பண்ண அந்த ஊர்க் கிராம அதிகாரிகள் அபரிமிதமான உற்சாகம் காட்டியிருக்கிறார்கள். அதாவது, வறட்சிப் பிரதேசமான அங்கே, ஏழை ஜனங்கள் குடிக்கத் தண்ணீர் சேமித்து வைக்கும் அண்டா, தவலைப் பானை, சொம்பு, லோட்டா, எல்லாவற்றையும் ஜப்தி செய்திருக்கிறார்கள். அதற்கு விளக்கம் எப்படிக் கொடுத்திருக்கிறார்கள் தெரியுமா?... 'ஜனநாயக ஆட்சி என்றால் இப்படித்தான் இருக்கும்! இருபது அம்சத் திட்டம் என்றால் இதுதான்' என்றெல்லாம் சொல்லியிருக்கிறார்கள். அநேகமாக அந்த அதிகாரிகள் முந்திய அரசாங்கத்திடம் பக்தி உள்ளவர்களாக இருக்கலாம்! அந்தப் பக்தியைத் தொடர்ந்து காண்பிக்க இந்த மாதிரி சில்லறை விஷமங்கள். இது தெரிந்துதான் ஒரு கிராம அதிகாரி வீட்டில் எத்தனை பாத்திரங்களை ஜப்தி செய்து வைத்திருக்கிறார் என்று பார்த்தேன். இது முரசொலியின்

# மக்களின் சேவைக்கு மரகதம்

இனிமேல் பிடியை நழுவ விட நான் தயாரில்லை. என்னை அறிமுகப்படுத்திக் கொண்டேன். வந்த வேலையைச் சொன்னேன்.

''வேண்டாங்க! ப்ளீஸ்! எனக்கு இனிமேல் எந்த வித பப்ளிசிடியும் வேண்டாம்! ஏதோ என் பணியை, சேவையைச் செய்கிறேன். இதைக் கடமைன்னு நினைச்சுச் செய்கிறேனே தவிர, பெருமைன்னு நினைச்சுச் செய்யலே! ப்ளீஸ்! எனக்கு நிறைய வேலை இருக்கு.''

''அம்மா! நீங்க அப்படிச் சொல்லக்கூடாது. எங்களைப் போன்றவங்க உங்க கிட்டே விளக்கம் கேட்டால், அது எங்களுக்கு மாத்திரம் தான் தெரியும். இவரைப் போலப் பத்திரிகைக்காரங்க கேட்டாங்கன்னு லட்சக் கணக்கானபேருங்க தெரிஞ்சுக்க வாய்ப்பு ஏற்படும்'' என்று சொன்னார் எதிரே அமர்ந்திருந்த ஒரு கட்சி ஊழியர். (அவர் வாழ்க!)

இதற்கு மேல் யோசிக்க அவகாசம் கொடுத்தால் நஷ்டம் எனக்குத்தான் என்று அனுபவ பூர்வமாக எனக்குத் தெரியும். ஆகவே சட்டென்று மரகதம் அம்மையாரைப் பார்த்துக் கேட்டேன்: ''சமீபத்தில் நீங்க



பார்வையில் ஒரு 'ரெய்ட்!'' மரகதம் அம்மாள் உணர்ச்சி வசப்பட்டுப் பேசினார்.

''இருபது அம்சத் திட்டம், இருபது அம்சத் திட்டம் என்று எல்லோரும் ஏதோ பொருள் புரியாத பூஜை மந்திரத்தைப் பற்றிச் சொல்வது போல் பேசுகிறார்களே தவிர, உங்கள் தொண்டர்களிலேயே பல பேருக்கு இருபது அம்சங்களையும் ஒழுங்காகச் சொல்லி விளக்கும் ஆற்றல் இல்லை என்பது என் அபிப்பிராயம். தொழிலாளர்கள் மத்தியில் விவசாயிகளுக்கான திட்ட விளக்கங்களும், விவசாயித் தொழிலாளர்கள் மத்தியில் கடத்தல் ஒழிப்புத் திட்டத்தைப் பற்றிய பேச்சும், கொஞ்சம்கூடப் பொருந்தாத விஷயமாயிற்றே?'' இது என் கேள்வி.

''ஆமாங்க, ஆமாங்க! இந்தத் திட்டங்களை நல்ல விளக்கங்களோடு பயிற்சியாகவே அளித்தால்தான் நாங்கள் புரிந்துகொண்டு மற்றவர்களுக்கும் இடத்துக்குத் தகுந்தாற் போல் விளக்க முடியும்'' என்றார் சற்றுத் தள்ளியிருந்த ஒரு தொண்டர்.

சற்று நிதானமாகவே மரகதம் அம்மாள் பதில் சொல்ல ஆரம்பித்தார்.

''முன்பெல்லாம், அதாவது திராவிட முன்னேற்றக் கழகம் பதவிக்கு வரு முன்பு நெடுஞ்செழியன் போன்றவர்கள் மேடையில் பிரசாரச் சொற்பொழிவு ஆற்றும்போது கையில் ஒரு சிறு சீசாவை வைத்துக் கொண்டு, 'பொதுமக்களே! முன்பெல்லாம் காலணாவுக்குத் தேங்காய் எண்ணெய் வாங்க வேண்டுமானால் இந்தப் பாட்டில் பத்தாது. இப்போது நாலணாவுக்கு எண்ணெய் வாங்கினால் இதே பாட்டில் அடியில் எட்டிப் பார்க்கும் அளவுக்கு இருக்கிறது. அநியாயம்! எங்களுக்கு ஓட்டுப் போடுங்கள். நாங்கள் விலைவாசியைக் குறைத்து உங்களுக்கு ரூபாய்க்கு மூன்று படி அரிசி போடுவோம்' என்பார்கள்.

''கையிலிருக்கும் பாட்டிலும் வாயிலிருந்து உதிரும் பசப்புவார்த்தைகளும் பொதுமக்களை ஒரு மாயையில் ஆழ்த்தின. கடைசியில் அவர்கள் ஆறு ரூபாய்க்குக் கூட ஒரு படி அரிசி போட்டார்கள்.

''இப்போது நிஜமாகவே விலைவாசி வீழ்ச்சியடைந்த வேளையில் இதை நன்கு விளக்கி, மக்களிடம் நல்லாட்சிக்கு நம்பிக்கையூட்டச் சொல்லாட்சியுள்ளவர்கள் குறைவு என்பதை ஒப்புக் கொண்டாக வேண்டும். இந்தத் துறையில் இன்னும் கவனம் செலுத்தப்பட வேண்டும் என்பதை ஒப்புக் கொள்கிறேன்'' என்றார். தொடர்ந்து, ''என் அனுபவத்தையே எடுத்துக் கொள்ளுங்களேன். சில மாதங்களுக்கு முன் இங்கே வந்திருந்தபோது என் தாயாருக்கும் சகோதரிக்கும், ஐம்பது ரூபாய் விலையில் கைத்தறிப் புடவை வாங்கிக் கொண்டு போனேன். இந்தத் தடவை அதே ரகப் புடவைகள் இருபத்தி இரண்டே ரூபாய்தான்! அரசாங்கத்தின் முயற்சியால் நெசவாளர்களுக்கு மலிவாக நூல் கிடைக்கிறது. சரக்குகளின் விலையும் இறங்கியிருக்கிறது. இவற்றையெல்லாம் பொதுமக்களிடம் விளக்க வேண்டும்'' என்றும் சொன்னார்.

''நீங்கள் அரசியல்வாதியா? சமூக சேவகியா?'' என்று ஒரு கேள்வியைக் கேட்டேன்.

''நான் ஒரு காலத்தில் அரசியல்வாதியாக இருந்திருக்கிறேன். மறுக்கவில்லை. ஆனால் இப்போது முழுக்க முழுக்கச் சமூக சேவையில் ஈடுபடத்தான் விரும்புகிறேன். ஆனாலும் சில நேரங்களில் அரசியல் விவகாரங்களையும் பார்க்க நிர்ப்பந்தம் உண்டாகிறது. இப்போதுதான் பெரியவர் காமராஜ் இல்லையே என்று வருத்தப்படுகிறேன். அவர் இருந்தால் அரசியல் கோணத்தை அவர் பார்த்துக் கொள்வார். சமூக சேவையை நான் கவனித்துக் கொள்வேன்.''

பேச்சை நிறுத்திச் சற்று இடைவெளி விட்டு ஒரு சம்பவத்தைச் சொன்னார்:

''நான் மத்திய அரசில் மந்திரியாக இருந்த போதே மாலை மரியாதையெல்லாம் எனக்குப் பிடிக்காது என்று கண்டிப்பாகச் சொல்லி விடுவேன். ஒரு சந்தர்ப்பத்தில் ஒரு பள்ளிக்கூட விழாவில் பங்கேற்கப் போயிருந்தேன். விழாவுக்கு ஏற்பாடு செய்திருந்தவர்கள் உற்சாக மிகுதியால் எனக்கு ஏராளமான மலர் மாலைகளைப் போட ஏற்பாடு செய்துவிட்டார்கள். எனக்குக் கோபம். ஆனால் அதைக் காட்டுவது நாகரிகமில்லை. அவர்களுக்கு வேறு வழியில் புத்திமதி சொல்ல ஒரு முடிவுக்கு வந்தேன். நான் பேச எழுந்தவுடன், 'எனக்கு இந்த மாலை உபசாரம் வேண்டாம் என்று சொல்லியும் நீங்கள் அன்பினால் கொண்டு வந்து குவித்து விட்டீர்கள். இவைகளை ஏற்றுக் கொண்டதற்காக எனக்கு நானே இருநூறு ரூபாய் அபராதம் விதித்துக்கொள்கிறேன். இதோ அந்த இருநூறு ரூபாய். ஆங்கிலத்திலும் தமிழிலும் உயர்ந்த மதிப்பு எண்கள் பெற்ற மாணவிகளுக்கு இதைப் பகிர்ந்து கொடுத்து விடுங்கள்!'' என்று அறிவித்தேன். அன்று முதல் எங்கும் எனக்கு மாலை போடத் தயங்குவார்கள்.''

''பாத யாத்திரை போனீங்களாமே?'' என்றேன்.

''காரிலே போயிட்டு இருக்கிறபோது வழியிலே ஒரு கிராமத்தை யொட்டி நிறுத்தி அந்த ஊர்க்காரங்க குறைகளைத் தேவைகளை விசாரிக்கலாம். ஆனால் அப்ப அந்த ஜனங்கள் மனத்தில் ஒட்டுதல் தோணாது. 'என்னவோ எங்கேயோ போற அவசரத்திலே விசாரிச்சுட்டுப் போறாங்க' என்று நினைப்பாங்க. ஆனால் ஒரு குறிப்பிட்ட பகுதியிலே அவங்களோட, அவங்களுக்கு நடுவே, பேசிக்கிட்டே நடந்து அவங்க தேவைகளைக் கேட்கும்போது ஒருவித ஈர்ப்பு ஏற்படுகிறது. இதிலேதான் ஏழை மக்களுக்கு அரசாங்கத்திடம் நம்பிக்கை வளரும். தங்களையும் பெரிய பதவியில் உள்ளவர்கள் மறக்கவில்லை என்று பெருமிதம் அடைவார்கள். இந்தப் பெருமிதம் ஆக்கப் பூர்வமான உழைப்புக்குத் தேவை.''

பலர் கதவுக்கு அப்பால் மரகதம் அம்மையாரைச் சந்தித்துத் தங்கள் குறைகளையோ, தேவைகளையோ, வேண்டுகோள்களையோ தெரிவிக்கக் காத்திருப்பதை உணர்ந்தேன். அவர்களின் கோபத்துக்கு மேலும் பாத்திரமாக விரும்பாமல் எழுந்து கரம் கூப்பினேன்.

''நீங்க ஜெயிச்சுட்டீங்க! அம்மாவைப் பேச வெச்சுட்டீங்க!'' என்றார் ஓரத்தில் உட்கார்ந்திருந்த ஒரு காங்கிரஸ் ஊழியர்.

**பேட்டி : கோமதி சுவாமிநாதன்**

அத்தியாயம் 4

## பார்க்கும் இடமெங்கும் நீக்கமற....

# சேரமான் காதலி

ரவிவர்மன் போட்ட சத்தத்தைக் கேட்டு அடுத்த கட்டில் படுத்திருந்த பத்மாவதியும், வெளியில் இருந்த சேவகர்களும் விழித்துக் கொண்டார்கள். கதவு தாழிடப்பட்டிருந்ததால் சேவகர்களால் உள்ளே நுழைய முடியவில்லை. வெகுவேகமாக உள்ளே நுழைந்த பத்மாவதி அச்சத்தோடு அங்குமிங்கும் சுற்றிப் பார்த்தாள்.

முன்னும் பின்னும் பார்த்துத் தள்ளாடியபடியே, ''நீ போய்விடு;



கண்ணதாசன்

நீ போய் விடு'' என்று சொல்லிக் கொண்டே பின்பக்கமாக நடந்து வந்தான் ரவிவர்மன்.

யாரோ எதிரிகள் உள்ளே வந்து விட்டார்கள் என்று அஞ்சிய பத்மாவதி பளிச்சென்று ஓடிக் கதவைத் திறந்துவிட்டாள்.

இரவு நேரக் காவலர்கள் தடதட வென்று உள்ளே நுழைந்தார்கள். அங்குமிங்கும் ஒவ்வொரு பகுதியாகத் தேடினார்கள். யாரையும் காணவில்லை. தலை தாழ்ந்து நின்றார்கள்; பின்பு வெளியேறினார்கள்.

ரவிவர்மன் மேனி நன்றாக வியர்த்திருந்தது.

பத்மாவதி ஒரு துண்டினால் அவன் மேனியைத் துவட்டி விட்டாள்.

அதுவரையில் அவளோடு பேசாத ரவிவர்மன், அப்போதும் பேசவில்லை.

அவன் படுக்கையில் சாய்ந்தான்.

'நானும் இங்கேயே இருக்கட்டுமா' என்பது போல், பரிதாபமாக அவனைப் பார்த்துக் கொண்டிருந்தாள் பத்மாவதி.

''சரி; நீ போய்ப் படு'' என்றான் அவன்.

அவள் தயங்கித் தயங்கி நின்றாள்.

''ஒன்றுமில்லை; நீ போய்ப் படு'' என்றான் மீண்டும் அவன்.

பதில் சொல்ல வகையின்றிப் பத்மாவதி தன் அந்தப்புரத்துக்குத் திரும்பினாள்.

'இது ஏதோ ஒரு வகைப் பிரமை' என்று தன்னைத் தானே தேற்றிக் கொண்டான் ரவிவர்மன்.

'கண்ணால் பார்த்தேனே, அங்கொருத்தி இருந்தாளே' என்று, மனம் சொல்லிக் கொண்டேயிருந்தது.

தூக்கம் பிடிக்காமல் சுற்று முற்றும் பார்த்தபடியே பள்ளியில் சாய்ந்திருந்தான் ரவிவர்மன்.

'யார் நீ, யார் நீ?' என்று அவன் அந்தப் பெண்ணைப் பார்த்துக் கேட்டதும், அவள் எழுந்து அருகிலே வந்ததும் அவள் மூக்கிலிருந்த சிவப்பு மூக்குத்தியின் ஒளி கண்ணைக் குருடாக்குவது போல் பிரகாசமாக இருந்ததும் அவன் பயந்து பின்வாங்கியதும் அவன் நெஞ்சைவிட்டு நீங்கவில்லை.

சந்தேகம் வளர்ந்தால், தேகமே சந்தேகமாகிவிடும்.

அவன் மெதுவாக எழுந்து மீண்டும் மகுடம் இருந்த அறையை எட்டிப் பார்த்தான். அங்கே யாரும் இல்லை; நிச்சயமாக யாரும் இல்லை!

அவன் நிம்மதியோடு மீண்டும் பள்ளியில் வந்து சாய்ந்தான்.

அப்போதும் தூக்கம் பிடிக்கவில்லை. எழுந்து ஒரு போர்வையைப் போர்த்திக் கொண்டு, கதவைத் திறந்து வெளியே வந்தான்.

தன் குதிரையைக் கொண்டு வரச் சொல்லித் தான் மட்டும் தனியாகப் புறப்பட்டான்.

காவலர்களுக்கு விஷயம் புரியும்; கேள்வி கேட்கவும் முடியாது; பேசாமல் இருந்தார்கள். இதில் துணைக்குப் போவது வழக்கமில்லை என்பதால்.

அவன் குதிரைக்கே வழி தெரியும். அது பூஜியாளுவின் இல்லத்தை நோக்கிச் சென்றது.

அவன் வெளியேறியதை அறியாத பத்மாவதி தன் அந்தப்புரத்தில் படுத்தபடி சிந்தனையில் ஆழ்ந்தாள்.

நாயகனோடு தினமும் நிம்மதியாக வாழ்வது என்பது சில பெண்களுக்கு மட்டுமே வாய்த்த அதிருஷ்டம்.

வாணிபம் கருதியோ, போர் கருதியோ பிரிந்து சென்ற கணவனுக்காக ஏங்கி ஏங்கித் தூங்காமல் இரவைக் கழிக்கும் தோகையர்கள் பலர்.

பரத்தையர் இல்லம் சென்ற கணவனை எண்ணிப் பள்ளியை நனைக்கும் பாவையர் சிலர்.





'இல்லையே' என்பது ஒரு வகைக் கவலை; 'இருந்தும் இல்லையே' என்பது மறு வகைக் கவலை.

'அருகில் இருந்தும் ஆதரவு இல்லையே' என்பது சித்திரவதை.

வெளியே சொல்லமுடியாத வேதனை விரகதாபம்.

அதிகம் பேசுகிற பெண்ணையும் ஊமையாக்கும் அவலம் அது.

குலமகளிர் அல்லாதவர் நிலைமை வேறு.

பத்மாவதியோ குலமகள். பர புருஷனை நினைக்கத் தெரியாதவள். அவள் ரவிவர்மனையே நினைத்தாள்; அவனுக்காகவே ஏங்கினாள்.

'கெட்ட கனவு கண்டு சத்தமிட்ட நாயகன், நல்ல கனவு கண்டு நம்மைஎழுப்பியிருக்கக் கூடாதா?' என்று எண்ணினாள்.

பெருமூச்சு, அனல் மூச்சாக எழுந்தது. நெஞ்சகம் விம்மித் தாழ்ந்தது. மேனி தணலாய்க் கொதித்தது. கழுத்தில் அணிந்த மாலை மணிகள் கருகுவது போல் தோன்றிற்று. வியர்வை ஆறாகப் பெருகிற்று.

இந்த வேதனைக்கு மருத்துவரையா அழைக்க முடியும்?

அந்தப்புரத்தின் பின்கட்டில் விழித்தபடியே உட்கார்ந்திருந்தார்கள், சில பெண்கள்.

அவசரம் என்று மகாராணி அழைத்தால், அழைத்த உடனே வருவதற்குத் தயாராக அவர்கள் அங்கே இருப்பது வழக்கம். அவர்கள் இருக்கும் இடத்தில் தலைக்கு மேலே ஒரு மணி கட்டப்பட்டிருக்கும். அந்த மணியின் நாக்கில் கட்டப்பட்ட கயிறு மேல் சாளரத்தின் வழியாக அந்தப்புரத்துக்குள் கொடுக்கப்பட்டிருக்கும். அது, மகாராணியின் கட்டிலுக்கு நேரே தொங்கிக் கொண்டிருக்கும். மணியை அடித்தால் ஒரு தோழி உள்ளே வருவாள்.

பத்மாவதி மணியை இழுத்தாள். ஒரு தோழி உள்ளே நுழைந்தாள்.



சபாஷ்! சபாஷ்!

'பெமினா' பத்திரிகை ஓர் ஊறுகாய் சிறப்பிதழ் வெளியிடப் போகிறது.

பெமினா --பாபு

---

விவரம் தெரிந்தவள் போல் கையில் மயில் தோகை விசிறி வைத்திருந்தாள்.

பத்மாவதிக்கு அந்த அரண்மனையில் எல்லோரையுமே தெரியாது. முன்பு மெல்லிளங் கோதையைப் பார்க்க வரும்போது சில பெண்களை மட்டுமே பார்த்திருக்கிறாள்.

இந்தப் பெண் அவளுக்கு அறிமுகமானவள் அல்ல.

அவள் பார்ப்பதற்கு அழகாக இருந்தாள்.

தோகை விசிறியும் கையுமாக அவளைப் பார்த்ததும் பத்மாவதி, ''நான் விசுறுவதற்காகத்தான் உன்னை அழைத்தேன் என்பது உனக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டாள்.

''மெல்லிளங்கோதை இதுபோன்ற நேரங்களில்தான் அழைப்பாள்'' என்று அவள் சொன்னாள்.

''நீ எவ்வளவு நாட்களாக இங்கு இருக்கிறாய்?''

''ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக!''

''பார்த்தால் இருபது வயது போல் தோன்றுகிறது....''

''இளமை எனக்கு வரம்! முதுமை என்னைத் தீண்டாது!''

''சொந்த ஊர் எது?''

''மதுரை.''

''உன் பெயர்?''

''கண்மணி என்பார்கள் செல்லமாக; அசல் பெயர் காளியம்மை!''

''பிறந்தது மதுரையில்தானா?''

''இல்லை; சோழ நாட்டிலே!''

''சோழ நாட்டில் எந்த ஊர்?''

''அந்த ஊர் இப்போது இல்லை.''

''அப்படி யென்றால்....''

''ஊர் அழிந்து போய்விட்டது. ஊரார் பலரும் பல ஊர்களில் சென்று குடியேறிவிட்டார்கள். நாங்கள் மதுரையிலே குடியேறிவிட்டோம்!''

''இங்கே எப்படிப் பணி புரிய வந்தாய்?''

''நதி இழுத்தால் படகு ஓடுகிறது; விதி இழுத்தால் வேற்றூர் செல்கிறோம்; வேறு என்ன?''

''உனக்குத் திருமணம் ஆகிவிட்டதா?''

''ஆகிவிட்டது. அம்மி மிதித்து, அருந்ததி பார்த்து, மங்கல நாளில் மனையறம் புகுந்தேன். பொங்கிய வாழ்வில் பங்கு கேட்க வந்தாள் ஒருத்தி. இடம் கொடுத்தேன். இருந்த செல்வங்கள் அனைத்தையும் இழந்தேன். மதி மாறித் திரும்பி வந்த கணவனோ, பல நாட்கள் வாழவில்லை. மங்கலம் இழந்தேன்; இந்த மன்னர் குலத்தில் சேவைக்கு வந்தேன்.''

''மங்கலம் இழந்தாயா? நெற்றியில் குங்குமம் இருக்கிறதே?''

''மனத்திலே நாயகன் இருக்கிறான்; அதனால் மார்பிலே மாங்கல்யம் இருக்கிறது. கனவிலே அவனோடு உறவாடவே இந்த மாங்கல்யமும், இந்தக் குங்குமமும்!''

''உன் கதைக்கு வயது அதிகமாக இருக்கிறது; உன் கண்ணுக்கு வயது குறைவாக இருக்கிறது; உன்னை என்னால் நம்ப முடியவில்லை.''

''நம்பாமல் இருப்பது தப்பு. நம்பினோர் கெடுவதில்லை.''

— அவள் விசிறியபடியே சொல்லிக்கொண்டு மெதுவாகச் சிரித்தாள்.

அவள் மெதுவாகத்தான் சிரித்தாள். ஆனால் அந்தச் சிரிப்பு இடியோசை போல், பத்மாவதியின் காதில் விழுந்தது.

அவள் பயத்தோடு, ''ஏன் இப்படிப் பயங்கரமாகச் சிரிக்கிறாய்?'' என்றாள்.

''இல்லையே; மெதுவாகத்தானே சிரிக்கிறேன்'' என்று மெதுவாகவே சொன்னாள்.

''ஐயோ! ஏன் இப்படிச் சத்தம் போட்டுப் பேசுகிறாய்?'' என்றாள் பத்மாவதி.

''இல்லையே; மெதுவாகத்தானே பேசுகிறேன்'' என்று அமைதியாகப் பார்த்தாள் அவள்.

''ஐயோ! ஏன் இப்படிக் குரூரமாகப் பார்க்கிறாய்?'' என்றாள், பத்மாவதி.

''என்ன இது? என்னைப் பார்த்தாலே உனக்குப் பயங்கரமாகத் தெரிகிறதா?'' என்றாள் அவள்.

—'உனக்கு' ஒருமையில் பேசுகிறாளே!

பத்மாவதிக்குத் திகில் மூண்டது.

''ஏன் இப்படி மரியாதை இல்லாமல் பேசுகிறாய்?'' என்றாள்.

''நமக்குள் என்ன மரியாதை!'' என்றபடி அந்தப் பெண் பக்கத்திலே அமர்ந்தாள்.

பத்மாவதிக்கு எழ வேண்டும்போல் தோன்றிற்று; எழ முடியவில்லை.

அந்தப் பெண் பத்மாவதியின் கழுத்திலிருந்த மாங்கல்யத்தைத் தொட்டு, ''இது உனக்கு வேண்டுமா?'' என்றாள்.

நீங்கள்
துடிப்புடன்
செயல்பட
உங்களுக்கு
தேவை
ஸ்டேன்ஸ்
காபி




உங்கள் தேவைக்கேற்ப
சுத்தமான, மற்றும்
சுவைக் கேற்ப சிக்கரி
கலந்ததும் கிடைக்கும்




தி யுனைடெட் காபி சப்ளை
கம்பெனி லிமிடெட்
கோயம்புத்தூர்

# ஈடு இணையற்ற
# தரமான காபி ஸ்டேன்ஸ் காபி

HAC (B) UCS-2/75

# கிளர்ச்சியூட்டும் காட்டன்ஸ் அளிப்பதோ சென்சுரி

**சூட்டிங்குகள்**—கற்பனை வளம் நிறைந்த டிசைன்களும் சென்ச்சுரி பருத்தியின் குளுமையான சுகமும் பரிபூரணமாக இணைந்தவை

**ஷர்ட்டிங்குகள்**-திகைக்க வைக்கும் கோடுகள் மனதை மயக்கும் கட்டங்கள். எண்ணற்ற தினுசுகள்-இவை எல்லாமே சேர்ந்து, சென்ச்சுரி பருத்தி எண்ணிலா வண்ணங்களில் குன்றாத ஒளி பெற்றுத் திகழ்கின்றது.

**புடவைகள்** பருத்தியின் சுகபோக இதம்-ஆம் உங்களுக்கு சென்ச்சுரி மட்டுமே இந்த சுகத்தை அளிக்க முடியும். சென்ச்சுரி புடவை உங்கள் எழில் உடலை ஒட்டித் தழுவ, கிளுகிளுப்பூட்டும் மகிழ்ச்சியிலே திளைக்கிறீர்கள். நெருப்பை எதிர்த்து உழைக்கும் அக்னியவிரோதக் புடவைகளும் உண்டு.

**ஆடை அணி வகைகள்** ஜீவன் ததும்பும் டிசைன்கள். களிநடம் புரியும் வண்ணங்கள். சென்ச்சுரி பருத்தியின் மென்மையும் உணர்ச்சியைத் தொடும் சிறப்பும் உங்களை என்றும் மகிழ்விக்கும்.

**தி சென்ச்சுரி ஸ்பின்னிங் &**
**மான்யுபாக்சரிங் கோ. லிட்.,**
**பம்பாய் 400 025**





சென்ச்சுரி
நூற்றுக்குநூறு
பருத்தித்
துணிமணிகள்.

national-913-Tamil

''எதற்காக இப்படிக் கேட்கிறாய்?'' என்று நடுங்கினாள் பத்மாவதி.

''இல்லை; இது உனக்கு வேண்டுமானால் நீதான் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் '' என்றாள் அவள்.

பத்மாவதியால் பேச முடியவில்லை. கை, கால்கள் மரத்துப் போவது போல் தெரிந்தது.

''நீ யார் ? உண்மையைச் சொல்லி விடு ; நீ யார் ?'' என்று சத்தமிட்டாள்.

அவள்தான் சத்தமிட்டாளே தவிர, அந்தச் சத்தம் மெதுவாகவே அந்தப் பெண்ணுக்கும், அவளுக்கும் கேட்டது.

''ஆமாம், இது மெல்லிளங்கோதை படுத்திருந்த கட்டில்தானே; இதில் நீ எப்படிப் படுக்கலாம் ?'' என்று கேட்டாள், அந்தப் பெண்.

பத்மாவதிக்குச் சித்தப் பிரமையே பிடித்துவிடும் போல் இருந்தது. அவளால் அதற்கு மேல் பேச முடியவில்லை.

அந்தப் பெண் பத்மாவதியின் முகத்தருகில் தன் முகத்தைக் கொண்டு வந்தாள்.

''என்னை நன்றாகப் பார் '' என்றாள்.

பத்மாவதியின் முகத்தில் சிவப்பு வெளிச்சம் படர்ந்தது.

அந்தப் பெண் அணிந்திருந்த சிவப்பு மூக்குத்தி ஏதோ பேசுவது போல் அவள் காதுகளுக்குக் கேட்டது.

''அம்மா!'' என்றவள் சத்தமிட்டாள். அந்தச் சத்தம் பெரியதாகவே இருந்தது.

அந்தப் பெண் சிரித்தாள்; அரண்மனை நடுங்கிற்று.

இப்போது பத்மாவதியின் சத்தம் வேறு பகுதியில் படுத்திருந்த சாலியூர்த் தாவளிக்கு மட்டும் கேட்டது. சாலியூர்த் தாவளி ஓடோடி வந்தாள். மரணப் படுக்கையில் கிடப்பது போல் பத்மாவதி கிடப்பதைப் பார்த்தாள். வேறு யாரும் அங்கே இல்லை.

''என்னம்மா ? என்னம்மா ?'' என்று அவளை உலுக்கினாள் சாலியூர்த் தாவளி.

''யாரோ ஒரு பெண்.... யாரோ ஒரு பெண்....'' என்று குளறினாள் பத்மாவதி.

அங்குமிங்கும் சுற்றிப் பார்த்து விட்டு, ''யாரும் இல்லையே ! ஏதோ கனவு கண்டிருக்கிறாய். என்றைக்கிருந்தாலும் உன் நாயகன் உன் நாயகன் தான். அமைதியாகத் தூங்கு'' என்று எதையோ மனத்தில் கொண்டு பேசி விட்டு, மணியை மெதுவாக அடித்தாள். வெளியில் இருந்த பணிப் பெண்கள் ஓடி வந்தார்கள்.

''நீங்கள் அனைவரும் இவள் அருகிலேயே இருங்கள். நன்றாக விசிறுங்கள். விடியும் வரை விலக வேண்டாம் '' என்று கூறிவிட்டுத் தன் அறைக்குச் சென்றாள், சாலியூர்த்தாவளி.

சுற்றிலும் தோழியர் இருந்ததால் சற்று அச்சமின்றி மெதுவாகக் கண்களை மூடினாள் பத்மாவதி. இருப்பினும் அந்தப் பெண்ணைப் பற்றிய அச்சம் அவள் நெஞ்சை உலுக்கி எடுத்தது.

தன் அறைக்குச் சென்ற சாலியூர்த் தாவளி சற்றும் சலனமின்றி அமைதியாகப் பள்ளி கொண்டாள்.

பத்மாவதி போட்ட சத்தத்தில் அரண்மனையே விழித்திருக்க வேண்டும். மற்ற சகோதரிகளோ, காவற்காரர்களோ, பின்கட்டில் இருந்த பணிப் பெண்களோ அந்தச் சத்தத்தைக் கேட்கவில்லை. சாலியூர்த்தாவளிக்கு மட்டும் தான் கேட்டது. ஆனால் தனக்கு மட்டுமே கேட்டது என்பதை அவள் அறியமாட்டாள்.

'என்ன தூக்கம் அந்தப் பாவிகளுக்கு? பத்மாவதியின் அலறல் யாருக்குமே கேட்கவில்லையே, நாளைக்கும் ஏதாவது நடந்தால் இவர்கள் இப்படித்தான் தூங்குவார்கள் போல் இருக்கிறது' என்று எண்ணிக் கொண்டே படுத்தாள்.

ஒரு நாழிகைகூட ஆகியிருக்காது. எங்கிருந்தோ பாடல் ஒன்று வரும் சத்தம் அவள் காதில் கேட்டது.

ஆம்; அவள் காதுகளில் மட்டுமே அந்தப் பாடல் விழுந்தது.

''இந்நேரத்தில் யார் பாடுகிறார்கள்?''

குழப்பம் அடைந்த சாலியூர்த்தாவளி சாளரக் கதவுகளைத் திறந்து வெளிப் பக்கம் பார்த்தாள். அங்கே தோட்டத்தில் தலைவிரி கோலமாக நின்று, யாரோ பாடிக் கொண்டிருப்பது போல் அவளுக்குத் தோன்றிற்று.

அச்சத்தோடு கூர்ந்து கவனித்தாள். சாலியூர்த்தாவளி. உருவம் சரியாகத் தெரியவில்லை.

என்னை யாரென்று நினைக்கிறீர்கள்?
நான் ஒன்றும் அனாதையல்ல.
மன்னர் குலத்துப் பூங்கொடி ;
மாணிக்கத் தேரில் வளர்ந்தவள்.
அரண்மனையில் வாழ்ந்த பைங்கிளி.
அடிமையாக நிற்கிறேன் இன்று.
என்னை யாரென்று நினைக்கிறீர்கள்?
நானொன்றும் அனாதையல்ல.

---

**பக்தியின் உச்சகட்டம் !**

ரத்த பாங்கில் ரத்தம் கொடுத்து அந்தப் பணத்தைக் கொண்டு எம். ஜி. ஆர். படம் பார்ப்பார்கள் தமிழ் நாட்டில். பூத் டைம்ஸ் - கே. ஆர்.





+


+


=



**அதாவது, ஆசிரியர் பொறுமை, மென்மை, நெறி தவறுமை உடையவராய் இருத்தல் வேண்டும்.** **ஜீ. வி.**

---

அரச சபையில் என்னை அவ
மதித்தார்கள்.
அச்சங் கெட்டவர் நூறுபேர்
என்னை அவமானப் படுத்த
முயன்ருர்கள்.
இறைவனை நான் உதவிக்கு
அழைத்தேன்.
எப்படியோ தப்பி வந்துவிட்
டேன்.
என்னை யாரென்று நினைக்கிறீர்கள்?
நான் ஒன்றும் அனுதையல்ல.
மகுடம் பறிபோயிற்று.
மணந்தவர் கைகட்டி நின்ருர்.
மன்னரையாவது மதித்தார்களா?
வனவாசத்துக்கு அனுப்பி வைத்
தார்கள்.
என்னை யாரென்று நினைக்கிறீர்கள்?
நான் ஒன்றும் அனுதையல்ல.
தர்மம் உயிரோடு இருக்கிறது.
அது சாகவில்லை என்று நான் நம்பு
கிறேன்.
அதைப் பார்த்தவர்கள் யாராவது
இங்கே இருக்கிருர்களா ?
அவர்கள் என்னிடம் வாருங்கள்.
— பாட்டுத் தொடர்ந்தது.

என்ன பாட்டு இது? யார் இந்தப் பைத்தியக்காரி ?

யாரோ ஒரு பரிதாபத்துக்குரிய பெண் என்றுதான் சாலியூர்த்தாவளிக்குத் தோன்றிற்று.

இந்தப் பாடல் அவனுக்கு மட்டுமே கேட்டது.

இந்தக் காட்சி அவனுக்கு மட்டுமே தென்பட்டது.

மெதுவாக அவன் படிக்கட்டுகளில் இறங்கினுன். மெது மெதுவாக அந்தப் பெண்ணை நெருங்கினுன்.

காவலர்களை உதவிக்கு அழைக்க வேண்டும் என்று அவன் நினைக்கவில்லை ; ஏனே அவனுக்கு அது தோன்றவில்லை.

காவலர்கள் யாரும் அங்கு இல்லை.

அவனுக்கு அச்சமும் பிறக்கவில்லை; அந்தப் பெண்ணின் அருகே நெருங்க நெருங்க ஓர் அபூர்வ உணர்ச்சியும் உண்டாயிற்று.

கைகளைக் கட்டியபடி அமைதியாக அந்தப் பெண் நின்ருள்.

''யாரம்மா நீ?''

''நான் ஒரு ராஜகுமாரி.''

''ஏன் இங்கே நிற்கிருய்?''

''இங்கே நிற்க வேண்டும் போல் எனக்குத் தோன்றிற்று.''

''ராஜகுமாரி என்கிருய்; அனுதையைப் போல் வந்திருக்கிருயே....''

''அது என் தலையெழுத்து!''

''உனக்கு ஏதாவது தேவையா ?''

''ஓர் அரண்மனை தேவை !''

சாலியூர்த்தாவளிக்குச் சிரிப்பு வந்தது. காரணமில்லாமல் கண்களிலிருந்து கண்ணீர் வந்தது. கண்ணீரைத் துடைத்தால், அது மை போலப் பிசுபிசு என்று இருந்தது.

''உன் கண்களில் இருந்து ரத்தம் வருகிறது !'' என்ருள் அந்தப் பெண்.

சாலியூர்த்தாவளிக்குத் தலை சுற்றிற்று.

''இந்த இருட்டில் என் கண்களில் இருந்து வருவது ரத்தம் என்பது உனக்கு எப்படித் தெரிந்தது ?'' என்று கேட்டாள்.

''இதோ பார்!'' என்று ஒரு பக்கமாகத் திரும்பினுள் அந்தப் பெண்.

சிவப்பு வெளிச்சம் படர்ந்தது.

சிவப்பு மூக்குத்தி ஜொலித்தது.

சாலியூர்த்தாவளி தடாலென மயங்கி விழுந்தான்.

அந்தப் பெண் அவனைக் கைகளிலே தூக்கினுள். அவனது பள்ளியறையில் கொண்டு வந்து பஞ்சணையில் கிடத்தினுள்.

சற்று நேரத்தில் கண் விழித்த சாலியூர்த்தாவளி சுற்றுமுற்றும் பார்த்தான்; அங்கே யாரையும் காணவில்லை.

அதே நேரத்தில் பூஜியானுவின் இல்லம் நோக்கிக் குதிரையிலே சென்று கொண்டிருந்தான் ரவிவர்மன். அவன் என்ன உதைத்தும் குதிரை வேகமாகச் செல்லவில்லை. 'பூஜியானுவின் இல்லம் செல்வதற்குள் விடிந்துவிடும்' என்றே அவன் கருதினுன்.

' அந்தக் குதிரை அடிமேல் அடி வைத்து மெதுவாகச் செல்வானேன் ?'

அவனுக்கே புரியவில்லை.

அவன் போவது பூஜியானுவின் இல்லத்துக்குத்தான்; நிச்சயமாக அங்கே தான்.

இதோ, ஒரு வழியாக அந்த இடம் வந்துவிட்டது.

''என்ன இது? இதுதான் பூஜியானுவின் இல்லமா? நாம் எங்கே வந்திருக்கிறோம் ?'' என்று சுற்றுமுற்றும் பார்த்தான்.

அவன் குதிரை நின்ற இடம் பகவதி அம்மன் கோவில். (தொடரும்)

# துணிகரமான ஒரு நாடகம்

கும்பகர்ணன், இராவணனைப் பார்த்து, 'பேசுவது மானம், இடைபேணுவது காமம்' என்று மிகுந்த அருவருப்புடன் கூறுவான். இராமாயண காலத்திலேயே, இப்படியிருந்தது என்றால் இன்றைய உலகின் இரட்டை வேஷ தாரிகளைப் பற்றிச் சொல்லத் தேவையா?

இந்தக் கபட நாடகத்தை — இரட்டை வேஷத்தை அறவே வெறுப்பவன் ஸகாராம் பைண்டர். அவன் யோக்கியன் அல்ல. யோக்கியனாக நடிப்பவனும் அல்ல. கற்பு, கல்யாணம், ஒழுக்கம் என்றால் 'காசுக்கு எத்தனை' என்று கேட்பவன்; அசாத்திய முரடன். ஓர் அச்சகத்தில் வேலை செய்பவன். குடிப் பழக்கம் உள்ளவன். கணவனால் கைவிடப்பட்ட பெண்ணை அழைத்து வருவான். வரும் போதே தன்னைப் பற்றிச் சொல்லிவிடுவான். ''இந்த வீட்டில் நான்தான் எஜமானன். உனக்கு இரண்டு வேளைச் சாப்பாடு உண்டு. இரண்டு புடவை உண்டு. நான் ரொம்பக் கண்டிப்புக்காரன். குடிப்பேன். அடிப்பேன். எனக்கு மனைவியாகவும் இருக்க வேண்டும். இந்த வீட்டுக்கு யாராவது வந்தால் முக்காடினால் முகத்தை மறைத்துக் கொண்டு பேச வேண்டும். உனக்கு இந்த இடம் பிடிக்கவில்லையானால் என்றைக்கு வேண்டுமானாலும் எங்கு வேண்டுமானாலும் போகலாம். அப்படிப் போகும் இடத்துக்கு டிக்கெட்கூட வாங்கித் தருவேன்'' என்பான்.

இப்படிப் பட்டவனிடம் கணவனால் கைவிடப்பட்ட ஓர் அபலை — லட்சுமி — ஆறாவது வைப்பாக வந்து சேருகிறாள். அமைதியும், பரிவும், தெய்வ பக்தியும் உள்ளவள் லட்சுமி. அவளுடைய தெய்வ பக்தி, நிரீச்வரவாதியான ஸகாராமையும் ஓரளவு பற்றுகிறது. ஆனால் சில்லறைத் தகராறுகள் காரணமாய் ஸகாராம் லட்சுமியைப் பலாத்காரமாக வெளியேற்றுகிறான்.

இவளுக்கு அடுத்து கணவனை விட்டு ஓடி வந்த சம்பாவைக் குடியேற்றுகிறான் தன் குடிலுக்குள். ஆனால் இவள் லட்சுமிக்கு முற்றும் மாறுபட்ட சுபாவம் உடையவள். ஸகாராம் பைண்டரின் கண்டிப்பு கறாரெல்லாம் இவளிடம் பலிக்கவில்லை. உல்லாசமும், கேளிக்கையும், அலட்சிய சுபாவமும் படைத்தவள் சம்பா. அவனுக்கு மனைவியாக வாழ அவள் விரும்பவில்லை. அவன் வற்புறுத்தவே, ஸகாராமை விட அதிகமாகக் குடித்து விட்டுத் தன்னை மறந்து தன் உடலை ஸகாராமுக்கு ஒப்படைக்கிறாள். ஆனால் அவள் உண்மையாகக் காதலிப்பது, ஸகாராமின் நண்பனான தாவூத்தை. இந்த உண்மை ஸகாராமுக்குத் தெரிந்தவுடன், அவன் நிலைகுலைந்து, சம்பாவைக் கொன்று விடுகிறான்.

எவ்வளவோ வாழ்க்கை நெறிகளைத் தூக்கி எறிந்து எள்ளிநகையாடும் ஸகாராம் பைண்டர், பலரால் சுவைத்துக் கைவிடப் பட்ட பெண்ணாயினும், தன்னுடன் இருக்கும் வரை தனக்கு மட்டுமே சம்பா சொந்தமாய், விசுவாசமாக இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறான். பரம்பரை பரம்பரையாக வந்துள்ள பண்பாடுகளை, சமூகக் கட்டுப்பாடுகளை உடைத்தெறிந்து விடுவது என்பது அவ்வளவு சுலபமல்ல. ஸகாராம் பைண்டர் போன்ற ஒருவனாலேகூட முழுமையாகச் சாதிக்க முடியாத ஒன்றாக அது இருக்கிறது. நாடகாசிரியர் எந்தக் கருத்துடன் நாடகத்தை எழுதினார் என்பதை நம்மால் விண்டு கூற முடியாதென்றாலும் இப்படி ஒரு முடிவுக்கு வரவே நமக்குத் தோன்றுகிறது.

மராத்தியில் விஜய டெண்டுல்கர் எழுதிய ''ஸகாராம் பைண்டர்'' நாடகம் பெரும் பரபரப்பை ஏற்படுத்திவிட்டது. பம்பாய் போலீஸார் 33 இடங்களில் கத்திரிக்கோலைப் பிரயோகித்தனர் என்றால் எவ்வளவு துணிகரமான நாடகமாக இருந்திருக்க வேண்டும் என்பதை ஊகித்துக் கொள்ளலாம். இந்த நாடகம் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு, பல இடங்களில் வெற்றிக் கொடி நாட்டிவிட்டுத் தமிழ் நாட்டுக்கு வந்திருக்கிறது.

''மெட்ராஸ் பிளேயர்ஸ்'' நடிப்புக் கலைக்குச் சவாலாக விளங்கக் கூடிய மிக கஷ்டமான நாடகங்களையே தேர்ந்தெடுத்து நடித்து வந்திருக்கிறார்கள். இந்நாடகத்தையும் தேர்ந்தெடுத்தார்கள்.

லட்சுமியாக நடித்த குமாரி விசாலாட்சி ஏகாம்பரம், ஸகாராம் பைண்டராக நடித்த திரு விமல்பகத் ஆகியோர் பாத்திரமுணர்ந்து நடித்தனர். சம்பாவாக ஸ்ரீமதி பாரதி நாராயண் தோன்றினார். அவர் முதல் தடவை மேடையில் நுழைந்து வரும்போதே, அந்த நடையிலேயே பாத்திரத்தின் குணச் சித்திரத்தை அப்படியே காட்டிவிடுகிறார்.

நாடகக் கலைக்கு ஒரு புதிய திருப்பம், வரவேற்கத் தகுந்த திருப்பமா என்று ஆராய்வதில் பொருள் இல்லை. ஏனென்றால் அமோகமான வரவேற்பை ஸகாராம் பைண்டர் ஏற்கனவே பெற்றுவிட்டது! —எஸ்.வி.எஸ்.














''என் அக்காவின் ஹஸ் பெண்ட் ஹெட்மாஸ்டர், என் தங்கையின் புருஷன் டிராயிங் மாஸ்டர். என் கணவர் சரக்கு மாஸ்டர்...''

''நீதாண்டி அதிர்ஷ்டசாலி!''













''எங்கள் ஆபீஸ் கடிகாரத்தைக் காலை வேளைகளில் முப்பது நிமிஷம் ஸ்லோவாக வும் மாலை நேரங் களில் முப்பது நிமிஷம் ஃபாஸ்டாக வும் ஓடும்படி அட் ஜெஸ்ட் பண்ணித் தர முடியுமா?''



# இந்தக் கோடையில் வேர்க்குரு எங்கு தாக்கும்?

வேர்க்குரு எங்கு தாக்கினாலும், அதை முறியடிக்க உபயோகியுங்கள் ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரில் மட்டுமே நிருபணம் பெற்ற மருந்துக் கலவை அடங்கியுள்ளது. அது மூன்று வழிகளில் செயலாற்றுகிறது.

- வியர்வை உறிஞ்சுகிறது; சருமத் துவாரங்கள் அடைபடுவதைத் தடுக்கிறது.
- பாக்டீரியா கிருமிகள் பெருகுவதைத் தடுக்கிறது.
- சுகமும் குளுமையும் தந்து, உடனடி நிவாரணம் அளிக்கிறது.

ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரைக் குளித்தவுடனும், படுக்கும் முன்பும் உடம்பின்மீது தாராளமாகத் தூவுங்கள். உடனடியாக வேர்க்குருவைத் தடுக்கும் மருந்து கலந்த வேர்க்குரு பவுடர் இது ஒன்றுதான்!

நெற்றி

கழுத்து

தோள்

கைகள்

முதுகு




சந்தன மணத்திலும் கிடைக்கிறது.

**ஜான்ஸன்ஸ்® ப்ரிக்லி ஹீட் பவுடர் மட்டுமே உடல் எரிச்சலை நிறுத்துகிறது; அரிப்பிலிருந்து நிவாரணமளிக்கிறது உடனடியாக.**



Johnson & Johnson®

OBM-4317/R TM

# ஹார்ட் அட்டாக்!

டாக்டர்!

வர்த்தகத் துறைப் பிரமுகர்.... ராவ் வயது 53. முன்னிரவில் ஒரு விருந்துக்குப் போயிருந்தார். நள்ளிரவுக்குப் பிறகு மார்பில் வலி கண்டது. அளவுக்கு அதிகமாக உண்டதால் இருக்கலாம் என்று சமாதானம் செய்து கொண்டார். சற்றைக்கெல்லாம் வலி அதிகரித்தது. பொறுக்க முடியாமல் எழுந்து உட்கார்ந்தார். வியர்த்துக் கொட்டியது. தலை சுற்றி மயக்கம் வரும்போல் இருந்தது. ராவின் மனைவி டாக்டருக்குப் போன் செய்தார். டாக்டர் வந்து ஊசி மூலம் மார்ஃபைன் ஏற்றியும் ராவ் வலியால் துடித்தார். அவரை மருத்துவ மனையில் கொண்டு சேர்த்தவுடன் பிராணவாயு செலுத்தப்பட்டது. வலி நீங்காததால் மணிக்கு ஒரு முறை அவருக்கு மார்ஃபைன் ஊசி போட வேண்டியதாயிற்று. மறு நாள் இலேசான காய்ச்சலும் கண்டது. ஒரு வாரத்தில் அவர் அநேகமாகக் குணம் பெற்றுவிட்டார். எனினும், மேலும் மூன்று வாரங்கள் மருத்துவ மனையிலேயே ஓய்வு எடுக்குமாறு டாக்டர் கூறினார்.

''மூன்று வார ஓய்வுக்கு அவசியம் என்ன டாக்டர்?''

''நோயாளியின் இதயத்தில் ஏற்பட்ட காயம் முற்றும் குணமடைய அந்த அளவு ஓய்வு தேவை. அவரது உடல் இளைக்கக் குறைந்த அளவு உணவே அவருக்கு மருத்துவ மனையில் கொடுக்கப்பட்டது. மூன்று வாரங்களுக்குப் பிறகு கட்டிலின் விளிம்பில் அமர்ந்து இலேசாகக் கால்களை அசைக்கும்படி யோசனை கூறப்பட்டது. உடலில் களைப்பு ஏற்படுவது குறைந்ததும், நாற்காலியில் அமரவும் அந்த அறைக்குள்ளேயே நடமாடவும் அனுமதிக்கப்பட்டார். ஒரு மாதத்தில், அவருக்கு நன்கு குணம் ஏற்பட்ட பிறகு மருத்துவ மனையிலிருந்து 'டிஸ்சார்ஜ்' செய்யப்பெற்று வீடு திரும்பினார்.''

''இம்மாதிரி இதயத் தாக்குதலுக்குள்ளாகிப் பலருடைய உயிருக்கு ஆபத்தாக முடிகிறதே, டாக்டர்? இதற்கு என்ன காரணம்?''

''உரிய மருத்துவ வசதி உடனடியாகக் கிடைக்க வாய்ப்பு இல்லாத நிலையில் சிலர் உயிர் இழக்க நேரிட்டாலும், உடனடியாகச் சிகிச்சை செய்துகொண்டு உயிர் பிழைத்து அதன்பிறகு நீண்ட காலம் உயிர் வாழ்வோர் பலர் உளர். இதயத்தினுள் உள்ள திசுவுக்கு நல்ல இரத்தம் வந்து சேரும் குழாயில் (Artery) அடைப்பு ஏற்படுவதால் இரத்த ஓட்டம் நின்று திசு நசித்துப் போவதால் இந்த இதய உபாதை ஏற்படுகிறது.''

''இரத்தக் குழாயில் அடைப்பு ஏற்படக் காரணம் என்ன?''

''ஆர்ட்டரி எனப்படும் நல்ல இரத்தம் எடுத்துச் செல்லும் குழாயின் உட்சுவர் கெட்டிப்பட்டு இறுகுவதால் இரத்த ஓட்டம் தடைப்படுகிறது. வீடுகளில் அமைக்கப்பட்டுள்ள குடிநீர்க் குழாயின் உட்புறம் துருப் பிடித்து நாளடைவில் அடைப்பு ஏற்பட்டு நீரோட்டம் தடைப்படுகிற மாதிரி, கொழுப்புச் சத்து சிறுகச் சிறுக இரத்தக் குழாயின் உட்புறச் சுவரில் சேர்ந்துவிடுவதால் அடைப்பு ஏற்படுகிறது. இதயத்தில் இம்மாதிரிக் காயம்பட்ட அல்லது தாக்குதலுக்குள்ளான பகுதி பலவீனமடைந்து, அங்கு ஒரு 'வடு' (Scar) ஏற்பட்டு இறுகி விடுகிறது. இந்த நிலையில் இயற்கை கைகொடுத்து உதவுகிறது. பலவீனமுற்ற பகுதிக்கு, மற்ற இரத்தக் குழாய்கள் விரிவடைந்து கூடுதலான இரத்தத்தைக் கொணர்ந்து சேர்க்கின்றன. புதிய கிளைகளும் தாமே உருவாகி இரத்தத்தைக் கொண்டு வந்து சேர்க்க உதவுகின்றன. இத



பழுதுற்ற இதயங்கள் சீரான முறையில் துடிக்க உதவுமாறு மின் அலைகளை எழுப்பும் கருவியை உடலுக்குள் பொருத்தி வெற்றி கண்டது மருத்துவ உலகம். ஆனால் இக்கருவியின் பாட்டரியைப் புதுப்பிக்க ஒவ்வொரு முறையும் அறுவைச் சிகிச்சை நடத்தவேண்டியிருந்தது. இன்று நிலைமை மாறிவிட்டது. வாரம் ஒருமுறை தொண்ணூறு நிமிஷங்களுக்கும் படத்தில் வெள்ளையாகத் தெரியும் அங்கியை அணிந்திருந்தால் போதும். உடலுக்குள் உள்ள பாட்டரியின் சக்தி புதுப்பிக்கப்படுகிறது. இக்கருவியை உலகிலேயே முதன்முதலாக உபயோகித்துப் பலன் அடைந்தவர் 77 வயதான அமெரிக்க மாது ஹெலன் சேம்பர்ஸ்.



யத் தாக்குதலுக்கு உள்ளான நோயாளி குணமடைய இது உதவுகிறது.''

''பலவீனமுற்ற இதயத்துக்கு இப்படி மாற்று வழியில் இரத்தம் வந்து சேர்கிறதா என்பதைக் கண்டறிய என்ன வழி?''

''இ. ஸி. ஜி. எனப்படும் எலெக்ட்ரோ கார்டியோ கிராம் சோதனையின் மூலம் மருத்துவர்களால் இதயத்தின் இயக்கத் திறன் பற்றித் தெரிந்து கொள்ள இயலும்.''

''இரண்டாவது முறை, மூன்றாவது முறை இதயம் இவ்வித பாதிப்புக்குள்ளாக நேரும்போது நோயாளியின் உயிருக்கு ஆபத்து எனக் கூறப்படுகிறதே, டாக்டர்?''

''பாதிக்கப்பட்ட திசுவில் ஏற்பட்ட வடு முற்றும் சீராகக் குணமாகி விட்டால், வாழ்நாள் முழுதும் அந்தத் திசுவினால் எவ்வித அபாயமும் நேரிடாது. ஆனால், நோயாளியின் அசிரத்தை காரணமாக இதயத்தின் பிற பகுதியில் திசு மீண்டும் பாதிக்கப்படாமல் விழிப்போடு இருக்க வேண்டும்.''

''ஹார்ட் அட்டாக் முதல் தடவையே வராமல் தடுக்க முடியாதா?''

''உடல் பருமன் மிகுதியாவது, அதிக இரத்த அழுத்தம், நீரிழிவு ஆகியவை இந்த உபாதை ஏற்படக் காரணமாக அமையலாம். பரம்பரை நோயாகவும் இது அமையக் கூடும். அன்றாட உணவில் கொழுப்புச் சத்து கூடுதலாக இருப்பது இத்தாக்குதல் நிகழ்வதற்குச் சாதகமான சூழ்நிலையைத் தோற்றுவிக்கலாம். உடற்பயிற்சி இல்லாமல் இருப்பதும், புகை (சிகரெட்) பிடிப்பதும் இத்தாக்குதலுக்கான சாத்தியக் கூறுகளை ஏற்படுத்துகின்றன. இதையெல்லாம் உணர்ந்து முன்னெச்சரிக்கையாக இருப்பது நல்லது.''

டாக்டர் ஏ. சங்கரன் கூறக்
கேட்டு எழுதியவர்: ஆர். பி.

## நாலு கால் சிரிப்பு!

கே. வி. முரளி

நாய்க்குட்டியுடன் ஒருவர் செஸ் ஆடிக்கொண்டிருப்பதை ஆச்சரியத்துடன் பார்த்த விருந்தாளி கேட்டார்:
''இதென்ன அதிசயமாக இருக்கிறதே! இப்படி ஒரு புத்திசாலி நாயா?'' என்றார்.
உடனே வீட்டுக்காரர் சொன்னார்: ''ம், இதைப் போய் புத்திசாலி என்கிறீர்களே! இதுவரை ஆடிய மூன்று ஆட்டத்தில் இரண்டில் தோற்று விட்டது!''



''என்னுடைய பாமரேனியன் நாய் எவ்வளவு புத்திசாலி தெரியுமா?''
''என்ன செய்கிறது?''
''தினமும் பேப்பரை நேராக என்னிடம் கொண்டு வந்து தருகிறது.''
''இதென்ன அதிசயம்? என் நாயும்தான் அதைச் செய்கிறது.''
''ஆனால் என் வீட்டு நாய் கொண்டு வருவது பக்கத்து வீட்டுப் பேப்பரை!''



பக்கத்து வீட்டு இளைஞன் தன்னைத் தெருவில் ஒட்டைச் சிவிங்கி என்று பரிகாசம் செய்வதை மனைவி கணவனிடம் புகார் செய்ய, கணவன் போய் விசாரித்தான். இளைஞன், ''நான் உங்கள் மனைவியை ஒட்டைச் சிவிங்கி என்று கிண்டல் செய்யவில்லை. உங்களைத்தான் கங்காரு என்று கூப்பிட்டேன்'' என்றான்.
''அதுதானே பார்த்தேன்'' என்று நிம்மதிப் பெருமூச்சுடன் திரும்பி வந்தான் கணவன்!



யானை ஒன்று இறந்து கிடக்க அதன் பக்கத்தில் உட்கார்ந்து இடிந்துபோய் அழுதுகொண்டிருந்தான் ஒரு பாகன்.
''யானையின் மேல் அவ்வளவு உயிரையே வைத்திருந்தாயா?'' என்று கேட்டதற்குச் சொன்னான்:
''இல்லை, இதைப் புதைப்பதற்கு என்னையே குழியும் வெட்டச் சொல்கிறார்கள்!''



''எங்கள் வீட்டு மாட்டுக்குக் கணக்கு நன்றாக வரும் தெரியுமா?''
''எப்படிச் சொல்கிறாய்?''
''ஐந்தில் ஐந்து போனால் எவ்வளவு என்று கேட்டேன். அது ஒன்றுமே சொல்லவில்லை!''



''ஏராளமாகக் கடன் வாங்கியதால் என் கணவர் ஏழையானார். உன் கணவர் எப்படி ஏழையானார்?''
''ஏதோ ஒரு கடையில் 'மூன்று பலூன்கள் வாங்கினால் ஒரு யானை இனாம்' என்று போர்டு போட்டிருந்ததைப் பார்த்துத் தொலைத்துவிட்டார்!''



''காட்டில் புலி துரத்திக் கொண்டு வந்தால் கையில் 'டார்ச்' இருந்தால் தப்பித்துக்கொள்ளலாம் என்று சொல்கிறார்களே, உண்மையா?''
''உண்மைதான். ஆனால் நீங்கள் டார்ச்சை எடுத்துக் கொண்டு எவ்வளவு வேகமாக ஓடுகிறீர்கள் என்பதைப் பொறுத்திருக்கிறது அது!''

# ஆக்ஃபா ஐஸோலி-II



உள்ளது உள்ளபடி
உங்களை உயிரோவியமாகப்
பதிவாக்கும் காமெரா



ஆக்ஃபா-ஐஸோலி-II, நீங்கள் காத்திருந்து கையடையும் காமெரா. 120 சைஸ் சுருள் பிலிமிலே பளிச்சென்ற 16 படங்களை எடுத்திட நுட்பநவீனச் சிறப்புக்கள் பலவற்றை உடையது. பாருங்கள் இதோ அச் சிறப்புக்களில் சில:
• அழகிய வடிவம். • சக்தி மிகுந்த ஆக்ஃபா கலர்-ஆக்னர் f 5.6 லென்ஸ். • மூன்று ஷட்டர் வேக கதிகள்: B,1/30 & 1/100. • 5 அபெர்ச்சர் துளையமைப்புகள்: 5.6,8,11,16 மற்றும் 22.
• யூனிவர்ஸல் ஃப்ளாஷ் காண்டேக்ட் பின்.
ஆக்ஃபா-ஐஸோலி-II பற்றி மேலும் விவரமறிய, அருகிலுள்ள ஆக்ஃபா-கேவார்ட் விற்பனையாளரிடம் விசாரிக்கவும். மகிழ்ச்சியோடு அவர் இலவசமாக இயக்கிக் காட்டுவார்.






SIMOES/AG/12/75A TM

## ஆக்ஃபா-படமெடுப்பீர் ஆசைதீர!



விளியோகஸ்தர்கள் :
**ஆக்ஃபா-கேவார்ட் இந்தியா லிமிடெட்**
மர்க்கண்ட் சேம்பர்ஸ், 41 நியூ மெரீன் லைன்ஸ், பம்பாய்-400 020

நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்., பரோடா • பம்பாய்

# "காரணம் காட்டவும்"



நாடோடி





**ந**கரசபைகளின் குற்றங்களை எடுத்துக் காட்டி, அரசாங்கம் அவற்றுக்கு நோட்டீஸ் அனுப்பிக் கொண்டிருக்கிறது. ''இந்தக் குற்றங்கள் காரணமாக உங்கள் நகரசபையைக் கலைத்துவிட்டு, அதை ஏன் இரண்டு வருடங்களுக்குப் பிறகு மீண்டும் அமைக்கக் கூடாது என்பதற்குக் காரணம் காட்டவும்'' என்பதுதான் அந்த நோட்டீஸின் வாசகம்.

இதைப் பார்த்ததும், நானும் ஒரு ''காரணம் காட்டவும்'' நோட்டீஸ் இன்று ஒரு குழுவினருக்கு அனுப்பி வைத்தேன். அந்தக் குழுவினர் வேறு யாரும் இல்லை. என் குடும்பத்தினர்தாம்.

அந்த நோட்டீஸ் பின்வருமாறு:

''நீங்கள் இழைத்துள்ள கீழ்க்கண்டுள்ள குற்றங்களுக்காக ஏன் இந்தக் குடும்பத்தையே கலைத்துவிட்டு, இரண்டு வருடங்களுக்குப் பிறகு நாம் மீண்டும் ஒரு குடும்பமாகச் சேரக் கூடாது என்பதற்குக் காரணம் காட்டவும்.

1. குடும்பத் தலைவி வரவரக் குடும்பத் தலைவரின் அனுமதியின்றி, தன் இஷ்டப்படி செலவுகள் செய்ய ஆரம்பித்து விட்டாள். உதாரணத்துக்கு, போன மாதம் 15ம் தேதி அவள் வாங்கிய புதுப் பட்டுப் புடவைக்கு அவள் இன்னும் குடும்பத் தலைவரின் அனுமதி பெறவில்லை.

2. குடும்பச் செலவுக்காகப் பணம் அனுப்பி வரும் இரண்டு பிள்ளைகளும், இனி அத்தனை அனுப்ப முடியாது, குறைவாகத்தான் அனுப்ப முடியும் என்று சொன்னதும் அதைச் சரி என்று குடும்பத் தலைவி, குடும்பத் தலைவரின் அனுமதியின்றி ஒப்புக்கொண்டுவிட்டாள். அதன் காரணமாகக் குடும்ப வரும்படி குறைந்துபோக, குடும்பச் செலவைச் சரிக்கட்ட, குடும்பத் தலைவர் பாங்கியிலிருந்து பணம் எடுக்க வேண்டி வந்து விட்டது.

3. சமீபத்தில் நடந்த பெண் கல்யாணத்தின்போது, பெண்ணுக்கு 20 பவுனுக்குமேல் நகை போட முடியாது என்று குடும்பத் தலைவர் சம்பந்திகளிடம் கண்டிப்பாகச் சொல்லியிருந்தும், குடும்பத் தலைவரைக் கேட்காமல், குடும்பத் தலைவி தன் பத்துப் பவுன் சங்கிலியொன்றைப் பெண்ணுக்கு அதிகப்படியாகக் கொடுத்தாள்.

4. ரூ. 300 வாடகை வந்து கொண்டிருந்த குடும்பத்துக்குச் சொந்தமான வீட்டைத் தன் தங்கை புருஷன் என்பதற்காக ரூ. 250 வாடகைக்குக் கொடுத்து, குடும்பத்துக்கு நஷ்டம் உண்டாக்கி விட்டாள், குடும்பத் தலைவி. இதற்கு, கல்லூரி சென்று கொண்டிருக்கும் இரண்டு பிள்ளைகளும், பெண்ணும் உடந்தை என்று தெரிய வந்துள்ளது.

5. எனக்குப் பஸ்ஸில் ஆபீஸுக்குப் போவது கஷ்டமாக இருக்கிறது, ஒரு கார் வாங்கிக் கொடுக்க வேண்டும் என்று நான் குடும்பத்தினருக்கு மனுக் கொடுத்து இரண்டு வருடங்களுக்கு மேலாகிறது; அதற்கு இது வரை பதில் வரவில்லை.

6. என்னுடைய தினசரி அலுவல்களில் இந்தக் குடும்ப அங்கத்தினர்களின் தலையீடு அதிகரித்து விட்டது. அதனால் நான் குடும்பத்தைச் சரிவர நிர்வகிக்க முடியவில்லை.

7. சமீபத்தில் நடந்த மங்களப் பெண்டுகளின்போது, வாங்கின புடவையை என் தங்கைக்குக் கொடுக்காமல், தன் உறவினள் என்பதற்காகக் குடும்பத் தலைவி தன் தம்பியின் மனைவிக்குக் கொடுத்தாள்.

8. பட்ஜெட்டை மீறிச் செலவு செய்யும் வழக்கம் குடும்பத்தினரிடையே அதிகரித்துக் கொண்டிருக்கிறது. உதாரணமாக, சமீபத்தில் நடந்த பெண் கல்யாணத்தின்போது ஜவுளிச் செலவு ரூ. 10,000க்கு மேல் போகக் கூடாது என்று எல்லோரும் ஏகமனதாகத் தீர்மானித்திருந்தும் அந்தத் தொகைக்கு மேல் ரூ. 5,000 செலவு செய்தார்கள்.

• • •

நீங்களே சொல்லுங்கள்! இந்தனை குற்றங்கள் இழைத்துள்ள இந்தக் குடும்பத்தை ஏன் கலைத்துவிட்டு, இரண்டு வருடங்களுக்குப் பிறகு மீண்டும் ஒன்று சேர்க்கக் கூடாது?... என்ன சொல்கிறீர்கள்? இரண்டு வருடங்களுக்குப் பிறகுதான் மீண்டும் ஒன்று சேர்வானேன் என்கிறீர்களா? .... அதுவும் யோசனை பண்ண வேண்டிய விஷயம்தான்.

# ஸாண்டல்வுட் நைஸில்*

## உங்கள் மேனியைப் பாதுகாக்க இதனினும் சிறந்த டால்க் இல்லை—அதுவும் இத்தனை சிறந்த நறுமணத்துடன்.

ஸாண்டல்வுட் நைஸில்—இதிலிருந்து நீங்கள் பெறும் நன்மைகளை வேறு எந்த சாதாரண டால்கம் பவுடரும் தருவதில்லை. உங்கள் மேனிக்கு ஆண்டு முழுவதும் அருமையான பாதுகாப்புத் தரவல்ல விசேஷப் பொருட்கள் அடங்கியது நைஸில் ஒன்றுதான். துர்நாற்றம் வீசச்செய்யும் கிருமிகளைக் கொல்ல 'வல்ல குளோர் பென்ஸீன். வியர்வையை முற்றிலும் உறிஞ்ச வென்றே விசேஷ முறையில் உருவாக்கப் பட்ட இந்த பவுடர்—உங்கள் மேனி மீது அதிக நேரம் நீடித்து நிற்கிறது. சிந்தை குளிர்விக்கும் சந்தன மணம்...புத்துணர்வை உங்கள் மீது வாரியிறைக்கிறது.

மயக்கும் சந்தன மணம். நாளெல்லாம் நீடித்த புத்துணர்வு. ஆண்டில் 365 நாட்களும் புதுமை உணர்வு.






## ஸாண்டல்வுட் நைஸில்*—உங்கள் மேனிக்கு உகந்தது

ஸாண்டல்வுட் நைஸில் நன்மருந்து குணங்களடங்கிய பவுடர் க்ளாக்ஸோ தயாரிப்பு

*டிரேடு மார்க்

# அன்பின் நிறைவே குறையின் மறைவு

சென்னை, அண்ணா மேம்பாலத்துக்கருகே யார் கண்ணிலும் படாமல் ஒரு தனி உலகம் அமைதியாக இயங்கி வருகிறது. இங்கே சில கரங்கள் தறி நெய்கின்றன. சில கைகள் நூல் நூற்கின்றன. சில பூத்தையல் வேலைகளில் ஈடுபடுகின்றன. அவர்கள் அருகில் சென்று, ''அண்ணன் வந்திருக்கேன்!'' என்கிறார் அந்த இளைஞர்.

''அண்ணா! இன்று மாலை கதை உண்டல்லவா?'' என்று வெகு ஆவலோடு தம் பணியை நிறுத்திவிட்டுக் கேட்கின்றனர் அந்தப் பெண்கள்.



அவர்களுக்கு வெளி உலகைக் காணும் பாக்கியம் இல்லை! ஆனால் என்ன? அந்தக் குறையே தெரியாமல் வளர்வதற்கு அவர்களுக்குப் பார்வையற்றோர், செவிக் குறை உடையோர் பள்ளி உதவுகிறதே!

இளைஞர் வரதராஜன் சட்டக் கல்வியில் தேர்ந்து, பத்திரிகைத் தொழிலும் அனுபவமும் பெற்றிருக்கிறார். ஒன்பது வருஷங்கள் சுற்றுப் பயணிகளுக்கு 'வழிகாட்டி'யாகப் பல வி. ஐ. பி.க்களைப் பல்வேறு இடங்களுக்கு அழைத்துச் சென்றிருக்கிறார். இன்று இவர் ஆர். கே. சுவாமி விளம்பர ஸ்தாபனத்தில் கணக்குப் பிரிவு அதிகாரி. தினம் மாலை வேளைகளில் இந்தப் பார்வையற்றோர் செவிக்குறை வுடையோர் பள்ளிக்கு வந்து விடுகிறார். மாணவ மாணவிகள் அனைவரையும் ஓர் இடத்தில் அமர வைத்துக் கல்கியின் பிரசித்திபெற்ற சரித்திர நாவல்களை வாசிக்கிறார். அந்தக் குறையுள்ள செல்வங்களுக்குக் கதை கேட்பதில் உள்ள ஆர்வம் சொல்லி முடியாதது.







''சிவகாமியின் சபதத்தில் உங்கள் மனம் கவர்ந்தவர் நாகநந்தி அடிகள்தானே?''

''ஐயையோ! அவர் கொடுமைக்காரராயிற்றே! சிவகாமியும் மாமல்லனும்தான் எங்கள் உள்ளம் கவர்ந்தவர்கள்!''

''உங்களுக்குப் பிடித்தமான நாவல் எது?''

''இன்பமான முடிவு கொண்ட பார்த்திபன் கனவுதான்!''

தங்கள் வாழ்க்கையிலே மகிழ்ச்சிகரமான நாள் என்று இவர்கள் கருதுவது இவர்கள் கேட்ட சரித்திர நாவல் சிவகாமியின் சபதத்தில் வருகிற மாமல்லபுரத்துச் சூழலுக்கு இவர்களை இவர்கள் அண்ணன் அழைத்துப் போன தினம்தான்.

''அந்தக் கலைப் பொக்கிஷங்களைத் தொட்டுத் தொட்டுப் பார்த்து அவற்றின் மகிமையை அறிந்தோம். அந்த நாவலை அண்ணன் 'படிக்



- சகோதரி எலிசபெத்.
- பெருமாள்மலை உச்சிக்குப் போகும் வழியில்...
- சிற்பத் தூண்களைத் தொட்டுப் பார்த்துப் புரிந்து கொள்கின்றனர்.
- அண்ணன் சிற்ப விசித்திரங்களை விளக்குகிறார்.

கக் கேட்டுவிட்டு அந்தச் சரித்திரநாயகர்கள் பவனி வந்த இடங்களை நாங்களும் மிதித்ததில் எங்களுக்கு ஒரே ஆனந்தம்!'' என்று ராஜேசுவரி விவரிக்கிறாள். இந்த 'அந்தக'ப் பெண்மணிக்குப் பிடில் வாசிப்பதில் திறமை உண்டு. கவிதை இயற்றுவதிலும் ஆர்வம் அதிகம்!

''ஸார்! நான் எத்தனையோ வி. ஐ. பி.க்களை மாமல்லபுரத்துக்கு அழைத்துச் சென்று வந்திருக்கிறேன். ஆனால் இந்தப் பார்வையற்ற பெண்மணிகளை அழைத்துச் சென்று அந்தச் சரித்திரப் பிரசித்தமான இடத்தைக் காட்டி வந்ததில் ஏற்பட்ட திருப்தி வேறு எதிலும் கிடைக்கலே!'' என்று மன நிறைவுடன் விவரிக்கிறார் அவர்களது அண்ணன்.

இருபத்திரண்டு வயதிலே சகோதரி எலிஸபெத் பெல்ஜியத்திலிருந்து சேவா மனப்பான்மையுடன் இந்தியாவுக்கு வந்தார். மூன்று குழந்தைகளுடன் தொடங்கப்பெற்ற 'லிட்டில்பிளவர் கான்வென்ட்' அவரது சேவையை அடைந்து இன்று பொன் விழாக் கொண்டாடி விரிந்து பரந்து உயர்நிலைப் பள்ளியாகி 770 செவிக்குறை, பார்வைக் குறையுள்ளோருக்கு உதவி வருகிறது.

இந்தப் பள்ளியைச் சேர்ந்த பார்வையற்ற பெண்கள் மூவர் செய்த சாதனை நமக்குப் பிரமிப்பூட்டுகிறது. சீத்தா, அற்புதம், அகஸ்டைன் நெல்லி என்ற மூன்று பெண்களும் கொடைக்கானலில் 8,000 அடி உயரமுள்ள பெருமாள் மலையின் உச்சிக்கு ஏறிவிட்டனர். கால்கள் கல்லிலும் முள்ளிலும் அடிபட்டுக் காயமுற்றாலும் தங்கள் வெற்றியில் துன்பங்களை மறந்தனர். இவர்களது பெருமாள் மலை வெற்றி டென்சிங்கின் எவரெஸ்ட் வெற்றிக்கு இணையானதுதானே!

இந்தப் பள்ளியில் பயின்ற கோபாலன் என்பவர் எழும்பூர் ரயில் நிலையத்தில் அறிவிப்பாளராக இன்று வேலை பார்க்கிறார்.

செவிட்டு, ஊமைச் சிறுவர்கள் உதட்டசைவிலே கல்வி கற்கும் விதம் நம் நெஞ்சை நெகிழ்விக்கிறது. தங்கள் மனத்தில் குமுறும் எண்ணங்களை வெளியிடத்தான் அந்தப் பிஞ்சு உள்ளங்களுக்கு எத்தனை ஆசை!

''இந்த மாதிரி பிறவியிலேயே குறைகள் வருவதற்கு ஏதாவது அடிப்படை உண்டா?'' என்று சகோதரி எலிஸபெத்தை வினவுகிறோம்.

''மிக நெருக்கமான உறவுகளுக்குள்ளே திரும்பத் திரும்பக் கல்யாணம் நடப்பதால் இப்படி நேரலாம்'' என்று சொல்கிறார் சகோதரி எலிஸபெத்.

பொன் விழாக் காலம் இவர்களுக்குச் சேவை புரிந்த சகோதரி எலிஸபெத் தாயகம் பெல்ஜியத்துக்குத் திரும்பவிருக்கிறார். பிரியா விடை அளிக்கும் பார்வையற்ற குழந்தைகள் உருக்கமான நல் வாழ்த்துக்களைத் தருகிறார்கள், பிரெய்லி முறையில்! —பி.எஸ்.எம்.

## கொடுக்காமல் வைத்தவன் !

இரண்டு தோழிகளில் ஒருத்தி இரண்டு பூனைக்குட்டிகள் வைத்திருந்தாள். ஒன்று கறுப்பு நிறம்; மற்றொன்று வெள்ளை.

இன்னொருத்தி அவளிடம் கேட்டாள்: ''உன்னிடம் தான் இரண்டு குட்டிகள் இருக்கின்றனவே எனக்கு ஒன்று தந்தால் மகிழ்ச்சியோடு வளர்ப்பேன்.''

பூனைக்குட்டி வைத்திருந்தவள் சரியான கருமியின் மகள். அவள் யோசித்தாள்; பிறகு கேட்டாள்: ''உனக்கு எந்த நிறப் பூனை பிடிக்கும்?''

''வெள்ளை நிறப் பூனைக் குட்டிதான்!'' என்று ஆவலாகக் கூறினாள் தோழி.

''மன்னிக்கவும். வெள்ளை நிறப் பூனைதான் எனக்கும் பிடித்தது. அதன் மீது எனக்குக் கொள்ளை ஆசை.''

''அப்படியானால் பரவாயில்லை. கறுப்புப் பூனையைக் கொடுத்தால் போதும்'' என்றாள் பூனையைக் கேட்ட தோழி.

''நோ. நோ. 'உனக்குப் பிடிக்காத ஒன்றை அடுத்தவர்களுக்குக் கொடுக்காதே' என்று என் அப்பா சொல்லியிருக்கிறார். தயவுசெய்து மன்னிக்கவும்' என்றாள் அவள்.

- சோவியத் சிறப்புக் கட்டுரை ஒன்றிலிருந்து

— ''கிருஷ்ணா பாலன்''





விட்டில் 'ட்யூப் லைட்' மிகவும் மங்கலாக எரிவதைக் கண்டு, ''என்ன ஸார்! வோல்ட்டேஜ் டிராபினா?'' என்றார்.

''இல்லே ஸார். ஓல்ட் ஏஜ் டிராபின்தான். வாங்கி இருந்து வருடங்களாச்சு!'' என்று பதில் வந்தது.



''ஃபைலைக் காணோம் என்கிறீரே, எந்தெந்த ஃபைலைக் காணோம்?''

''எந்தெந்த ஃபைலைக் காணோம் என்பதுபற்றி ஒரு ஃபைல் தயாரித்திருக்கிறீர்களே! அந்த ஃபைலைக் காணோம்!''

— கோ. நீரா

அம்மா
அவங்க பாத்ரூம்
ஏன் அவ்வளவு
நாற்றமடிக்குது
நம்முடையது
எவ்வளவு
வாசனையா
யிருக்கு?

கண்ணு, நாம்
ஓடோனில்
உபயோகிக்கிறோம்



ஓடோனில் துர்நாற்றங்களை உடனடியாக அழிக்கிறது. பாத்ரூம் போன்ற இடங்களைத் தூய்மையாகவும் நறுமணத்துடனும் வைக்கிறது.

ஓடோனில் பல்வேறு நறுமணங்களில் கிடைக்கின்றன. ஓடோனில் வகைவகையான அளவுகளில், தினுசுகளில், டப்பாக்களில் கிடைக்கின்றன.

**பல்சாரா**
நலமான வாழ்க்கைக்கு
நவீனமான வசதிகள்

BALSARA பல்சாரா & கம்பெனி (பிரை.) லிட்.

CHAITRA-BLS-6 TAM REV.

# விலை இறக்கம்

ஸுப்பர் **ரின்** ~~ரூ.1-60~~

# இப்போது ரூ.1-45 தான்

(வரிகள் தனி)




**மின்னலடிக்கும் ஸுப்பர் ரின் வெண்மை... மேன் மேலும் அதி வெண்மை.**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-RIN. 20-140 TM




இருபது அம்சத் திட்டத்தில் மக்கள் ஈடுபாடு கொள்ள வழி அகில இந்தியா ரேடியோ கேளாமல் இருப்பது என்ற ரஸிகர் பதில் ஏற்றுக் கொள்ளக்கூடியதாய் இல்லை. குறிப்பாக, கிராமப்புறத்தில் ரேடியோப் பிரசாரம் மிகுந்த பயனை அளித்து வருகின்றது. எழுத்து வாசனையற்ற அப்பாவி விவசாயிகள் உணரும்படி வரதட்சணை ஒழிப்பு, எளிய முறையில் பாங்கில் கடன் பெறுதல், வட்டியில் இருந்து விடுதலை பெறல் இன்னும் பலவும் சுவையான நாடகத்தின் மூலம் தெரியப்படுத்தும் அகில இந்திய ரேடியோவை நீங்கள் பாராட்டித் தீர வேண்டும் என்பதில்லை; திட்டாமல் இருந்தால் அதுவே போதும்.

அவிநாசி
27-4-76 டி. செங்கோட்டை சுப்ரமணியம்

'குறளோவியம் கண்டோம்' என்ற தலைப்பில் வள்ளுவர் கோட்டம் உருவாக உதவிய திரு வி. கணபதி ஸ்தபதி அவர்களின் பேட்டி கல்கியில் இடம் பெற்றுள்ளது.

இந்தக் கட்டுரை வெளியாகியிருக்கும் பக்கத்திலேயே, ஆனால் தனியாக, காஞ்சி காமாட்சி அம்மன் கோயில் கும்பாபிஷேகத் திருப்பணியில் பிரதானமாக இருந்து பணியாற்றிய எஸ். எம். கணபதி ஸ்தபதி அவர்கள் சால்வை போற்றிக் கௌரவிக்கப்பட்டதாக ஒரு புகைப்படமும் வெளியாகியிருக்கிறது.



குறளோவியம் காண உதவி செய்திருக்கும் கணபதி ஸ்தபதி அவர்களும், கும்பாபிஷேகத்தில் பொறுப்பேற்ற கணபதி ஸ்தபதி அவர்களும் வெவ்வேறு நபர்கள். பெயர்ப் பொருத்தம் சில சமயங்களில் குழப்பத்தில் முடிந்தாலும் இருவரும் உறவினர்கள்தாம்.

திரு வி. கணபதி ஸ்தபதி, பூம்புகார் அமைப்பதற்கும் டில்லியில் உள்ள உத்திர சுவாமிமலை கோயில் நிர்மாணத்துக்கும் உதவியவர். மகாபலிபுரம் சிற்ப சாஸ்திரப் பள்ளியின் முதல்வர். திரு எஸ். எம். கணபதி ஸ்தபதி அமெரிக்காவில் உள்ள பிட்ஸ்பர்க் நகரில் நிறுவப்படும் ஏழுமலையான் கோயிலின் அமைப்புடன் இணைந்து நிற்கிறார்.

சென்னை – 84
2-5-76 கோமதி ஸ்வாமிநாதன்

(இதோ, குறளோவியம் காண உதவிய திரு வி. கணபதி அவர்களின் புகைப்படத்தையும் மகிழ்ச்சியோடு பிரசுரித்து விட்டோம். —ஆசிரியர்)

"பொன்னியின் புதல்வர்" என்ற மகுடமே அற்புதமாக வாய்த்து விட்டது. படிக்கப் படிக்க இனிக்கும் அழகுத் தமிழ்நடை.

பாரதியாரின் வழித் தோன்றல், தமிழில் முன்னர் யாரும் செய்யாத புதிய புதிய சோதனைகளைச் செய்து வெற்றி கண்டவர், கணக்கற்ற புதிய எழுத்தாளர்களைத் தோற்றுவித்தவர், கடல் போன்ற விரிந்த உள்ளத்துடன் நல்லனவற்றை எல்லாம் ஆதரித்து ஊக்குவித்தவர், தொட்டதை எல்லாம் பொன்னாக்கியவர், முப்பது ஆண்டுகள் தமிழர் வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் தனியரசு செலுத்தியவர், தனி மனிதராக இன்றி, கலைக் கோயிலாக, இலக்கிய – பண்பாட்டு–



தமது ருஷ்ய மனைவியுடனும் குழந்தைகளுடனும் பூர்ணம் சோமசுந்தரம்.

அரசியல் ஸ்தாபனமாக விளங்கியவர் கல்கி. அவருடைய வாழ்க்கை வரலாற்றை உரிய முறையில் எழுதுவது மிகக் கடினமான, மலைப்பூட்டும் அளவுக்குச் சிக்கலான காரியம். வறண்ட ஆராய்ச்சி நூலாக இல்லாமல் சுவையுள்ள கதையாக எழுதுவதோ, இன்னும் கடினமானது.

இந்த அரிய பெரிய காரியத்தைத் தமிழ் இலக்கியத்துக்கே புதிய சாதனையாக அற்புதமாக நிறைவேற்றியிருக்கிறார் சுந்தா.

தமிழ் இலக்கிய வரலாற்று மாணவர்கள், தமிழ் இலக்கிய வரலாற்றில் பற்று உள்ளவர்கள் எல்லோருமே, பல நூற்றாண்டுகளுக்குப் பின்னரும் இந்த நூலைச் சுவையுடன், ஆர்வத்துடன் படிப்பார்கள் என்பதில் எனக்கு ஐயம் இல்லை.

நூலை ருஷ்ய மொழியில் வெளியிடுவது பயனுள்ளதாய் இருக்கும் என்பது என் கருத்து. இது புத்தக வடிவில் வெளிவந்த பின் முயன்று பார்க்க நினைக்கிறேன்.

தமிழ்ப் புத்தாண்டு வாழ்த்துக்கள்.

மாஸ்கோ
7-4-76 பூர்ணம் சோமசுந்தரம்



ஃபோட்டோ பேஜ்

**வாழ்க்கைப் பாதையில் ஒரு மைல்கல்**

புகைப்படம்: எம். அனந்தராஜ்

Printed and published by V. Vaidyanathan on behalf of M/s. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras - 600 031.
Managing Editor: T. Sadasivam
Associate Editor: K. Rajendran

# ஒரு ரூபாய் மிச்சப்படுத்துங்கள்!

CINTHOL
LUXURY
TOILET POWDER
BY
Godrej

## சிந்தால்
## சோப் வாங்கும்போது
## சிந்தால் பவுடர் விலையில் ஒரு
## ரூபாய் மிச்சப்படுத்துங்கள் *

கூப்பன் அறிவிப்புடன் கூடிய சிந்தால் சோப் வாங்குங்கள். உறையின் பின் பக்கத்தில் ஒரு கூப்பன் இருக்கும். அதை உங்கள் டீலரிடம் கொடுத்து, ஒரு ரூபாய் தள்ளுபடியில் சிந்தால் டாய்லெட் பவுடர் (எந்த சைஸானாலும்) வாங்கிக் கொள்ளுங்கள்.




இந்த வாய்ப்பை
நழுவ விடாதீர்கள்!

இன்றே முந்துங்கள்!

*ஸ்டாக்குகள் உள்ளவரையே இந்தச் சலுகை உண்டு

Interpub/GS/13/75 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

மனோகரப் புதுநய
மொனேகோ மஞ்சரி




பார்லே
மொனேகோ
அப்படியே சாப்பிட அருமை—
மகுடம் வைத்துச் சாப்பிட மஜா

இந்தியாவின் உச்ச விற்பனை உடைய உப்பு பிஸ்கட்—
இப்போது கையடக்கமான ஜிகினாத் தாளுறைப் பேக்கெட்டுகளிலும் வருகிறது.



everest/394/PP-tm.